

# தமிழ்ப் புத்தாண்டில்...

சிறகடித்துப் பறக்கும்
சிங்காரக் கனவுகள்
நனவே ஆகட்டும்
நனவே ஆகட்டும்!

**வாழ்த்துக்கள்!**



एअर·इंडिया
AIR-INDIA

HTA.7425.95

# கோட்டான் ரிப்போர்ட்!

- சசிகலா புதுக்கட்சி தொடங்குகிறார்!
- இ. காங்கிரஸில் நக்மா!
- பிரேமானந்தாவின் முன்ஜென்மம்!
- சாமியார் ஆகிறார் ரஜினி!
- திவாரி மறைந்தது எங்கே?

நாட்டில் ஆறறிவு ரிப்போர்ட்டர்களுக்கெல்லாம் மதிப்பு குறைந்து போய், ஐந்து, நான்கு, மூன்று, இரண்டு, ஒன்று, அரை, கால் அறிவு நிருபர்கள் சகட்டுமேனிக்கு உலவ ஆரம்பித்துவிட்டார்கள். நமக்குக் கிடைத்த எறும்பார், இந்த வாரம் மச்சினிக்கு சீமந்தம் என்று கம்பி நீட்டிவிட, வேறு வழியின்றி, அகப்பட்ட கோட்டான் (முறைக்கிறார்... 'கோட்டார்') தந்த ரிப்போர்ட்டை ஏற்க வேண்டியதாகிவிட்டது.

அதிர்ச்சி மதிப்புக்கு அளவே இன்றி ஏகப்பட்ட ஷாக் நியூஸ்களைத் தந்த கோட்டானிடம், "என்ன ஒரு கப்ஸா?" என்றபோது, "நியூஸ் உண்மையா என்பதல்ல; சுவாரஸ்யமா, இல்லையா என்பதுதான் முக்கியம். இன்றைய யூகம், நாளைய நிஜம். இதுதான் எங்கள் கொள்கை" என்றார்.

"யாராவது முதுகில் டின் கட்ட வந்துவிட்டால்?" என்றபோது, "ரொம்ப வசதி. செமை பப்ளிஸிட்டி" என்றார் படு கேஷுவலாக.

இனி கோட்டானுடனான நமது உரையாடல் :

"சேதி தெரியுமா? சசிகலா தனிக் கட்சி ஆரம்பிக்கப் போகிறார்!"

- பாருங்கள்! ஆரம்பமே என்ன ஓர் அனல்!

"அட நிஜமாகவா?" என்றோம்.

"யெஸ்! சமீப காலமாக, ஜெயலலிதாவுக்கும் நடராஜனுக்கும் அவ்வளவாக ஒத்துக் கலை இல்லையா? 'என்னவர் பேச்சு நீ 'டூ'ன்னா, உன் பேச்சு நான் 'டூ' அப்படின்னுட்டாங்களாம்!"

"அதற்காக?"

"'என் பவர் என்ன தெரியுமா?' என்று ரொம்ப நெருக்கமானவங்ககிட்ட பயங்கரமாப் பொருமறாராம் சசி. இதே நிலை நீடித்தால்


• சசிகலா


• பிரேமானந்தா

வெகுசீக்கிரம் புதிய கட்சிதான்னு நியூஸ்."

"அடடா!"

"நடராஜன் அடிக்கடி வட இந்தியா போவதும் இது சம்பந்தமாத்தான்னு கிஸ்கிஸ்."

"ஏதும் தேசிய லெவல் முயற்சியா?"

"யாமறியோம் பராபரமே!" என்றவர், அடுத்த நியூஸுக்குத் தாவினார்.

"டெல்லிக்காரங்களுக்கு நெருக்கமான சினி ஸ்டார் இப்போ யார் தெரியுமா?"

"ஊருக்கே தெரியுமே, நக்மா?" என்றோம் கேலிக் குறியுடன்.

"அதே. ஆனால் நியூஸ் அதுவல்ல;



• ரஜினி

"அம்மணி சினிமாவுக்கு முழுக்குப் போட்டு விட்டு, கட்சி சேவைக்கு வரப் போறாராம்!"

"ஐயோடா!"

"ஏற்கெனவே அ.தி.மு.க. காரர்களால் மிரட்டல், உருட்டல் என்று நியூஸ் வந்ததல்லவா? அதன் தொடர்ச்சி... அரசியலில் புகுந்து கலக்கப் போகிறாராம்!"

"சரிதான்!"

"காங்கிரஸுக்கு கிளாமர் இல்லை என்று பரவலாகப் பேச்சு எழுந்திருக்கும் வேளையில் நக்மாவின் வரவு ஒரு மறுமலர்ச்சியாயிருக்கும் என்று மேலிடம் எதிர்பார்க்கிறதாம்."



• நக்மா

"வைஜயந்திமாலா முறைத்துக் கொள்ளப் போகிறார்!"

"அவர் அர்ஜுன் சிங்குடன் சேர்ந்து விடுவார்!" என்று அடுத்த குண்டைப் போட்டார்.

"நடக்கிற கதையா இது?"

"இது கலியுகம் வாத்யாரே! எதுவும் நடக்கும். பார், கே. பாலசந்தரின் படம் முடித்துவிட்டு ரஜினி சாமியாராகிவிடப் போகிறார்!"

"அடக் கடவுளே! அதெல்லாம் இல்லையென்று அவர்தான் முன்பே மறுத்துவிட்டாரே!"

"இருக்கலாம். இது சமீபத் தகவல். சினிமா உலக நடவடிக்கைகள் ஒன்றும் சரியில்லை. கோடிக்கணக்கில் நஷ்டம். சாட்டிலைட் ஆக்கிரமிப்பு.. இதனோடு ரஜினியின் ஆன்மிக நாட்டம், இமய மலைக்கெல்லாம் போய் வருவதை முடிக்கப் போட்டுப்பார்... போயஸ் கார்டனில் அடிபட்ட பேச்சு இது!"

"நீர் உதைபடப் போகிறீர்!"

"நம்புவதும் நம்பாததும் உன் இஷ்டம். இன்னும் இரண்டு நியூஸ் கைவசம் உள்ளது. வேணுமா? வேணாமா?"

"சொல்லித் தொலையும்!"

"பிரேமானந்தாவுக்கு அமெரிக்க விஸா கிடைத்துவிட்டது!"

"அட!"

"கூடிய சீக்கிரம் அங்கே போய் சமர்த்தாக செட்டில் ஆகிவிடப் போகிறார்! மாதாஜி திவ்யா இருக்கிற இடமே தெரியாத நிலையில் வேறொரு அம்மணி அருட்கரம் நீட்டியிருக்கிறார் இப்போது!"

"அது யார்?"

"நியூயார்க்கில் கோரேஷ்னு ஒரு செக்ஸ் சாமியார் கூண்டோட எரிச்சிட்டு செத்தது ஞாபகம் இருக்கா?"

"இருக்கு."

"அந்த குரூப்புல மிச்சம். கோரேஷ் மறு அவதாரமெடுத்து பிரேம்ஸா வந்திருக்கார்னு உருகறாங்களாம் பார்ட்டி!"

"சரிதான். வெகு விசேஷம்!"

"இன்னொரு விசேஷத்தையும் கேட்டுடு."

"சொல்லுங்க!"

"திடீர்னு காணாமப் போனாரே, திவாரி...."

"சொல்லுங்க, சொல்லுங்க. சும்மா ரெஸ்ட் எடுத்ததா பீட்டர் வுடறாரு?"

"ரெஸ்ட் இல்லை நைனா! கெஸ்ட்!"

"அட, அதென்ன?"

"சொந்த ஊருக்குப் போறதா பீலா வுட்டுட்டு சோனியா வூட்டுக்குப் போயிருக்கார்! ராவுக்கு எதிரா பயங்கர சதியாம். 'நீங்க வர்றதும் வராததும் உங்க இஷ்டம்; பிரியங்காவையோ, அட்லீஸ்ட் உங்க வீட்டு கூர்க்காவையாவது அரசியலுக்கு அனுப்புங்க. ஒரு ஆட்டம் ஆடிப் பாத்துருவோம்னு கேட்டிருக்காராம்."

• திவாரி

"அவங்க என்ன சொன்னாங்களாம்?"

"பார்க்கலாம். இத்தாலிலேருந்து என் கஸின் ஒருத்தரை வரச் சொல்லியிருக்கேன். குடி உரிமை வாங்கிட்டு, பிறகு அவரை நுழைச்சிடலாம். நான் பின்னால நின்னு கவனிச்சுக்கறேன்'னாங்களாம்!"

"உங்களுக்கெப்படி இது தெரியும்?"

"உனக்கென்ன அதுபத்தி? 'ஹாட்பேக்'ல வெச்சா மாதிரி என்ன ஒரு சூடு நியூஸ் பார்த்தியா? வேணும்னா யூஸ் பண்ணிக்கோ. ரெமுனரேஷனை கிராஸ் பண்ணாத செக்கா நாலு நாளுக்குள்ள அனுப்பிவை" என்று சொல்லிப் போயே விட்டார் கோட்டான்.

கற்பனை : கிச்சா

**காட்சி - 1**

பெரம்பலூரில் பத்திரிகையாளர் காமராஜ் திருமணம் ஒரு சர்வ கட்சி மாநாடு போல் நடக்கிறது. மேடையில் கலைஞர், வாழப்பாடி, திருநாவுக்கரசு மற்றும் குட்டிக் கட்சிகளின் தலைவர்கள். பேசுபவர்கள் எல்லாம் சொல்லி வைத்தாற்போல, "ஜெ. ஆட்சியை வீட்டுக்கு அனுப்ப, எதிர்க்கட்சிகள் ஒன்றுபட வேண்டும்" என்று பேசி, கலைஞரையும் வாழப்பாடியையும் பார்த்து அர்த்தமுள்ள புன்னகை பூத்துச் செல்கிறார்கள்.

**காட்சி - 2**

சென்னை தேனாம்பேட்டையில் எம்.ஜி.ஆர். அண்ணா தி.மு.க.வின் சார்பில் எம்.ஜி.ஆர். அறக்கட்டளை திறப்பு விழா. மேடையில் கலைஞரும், மூப்பனாரும் சிரித்து சிரித்துப் பேசிக் கொண்டிருக்கிறார்கள். போட்டோகிராபர்களுக்குக் கொண்டாட்டம். "கருணாநிதியும், மூப்பனார் அவர்களும் சேர்ந்தால் ஒரே நிமிடத்தில் இந்த அராஜக ஆட்சியை வீட்டுக்கு அனுப்ப முடியும்" என்று சொல்கிறார் திருநாவுக்கரசு. இந்த யோசனை பற்றித் தலைவர்களிடமிருந்து கான்க்ரீட்டான கருத்துக்கள் வர மறுக்கின்றன.



# காங்கிரஸ் - கலைஞர் கைகுலுக்கல்?

ஜெயலலிதாவின் ஆட்சிக்கு எதிராக பாமரர்கள் மத்தியில் ஏற்பட்டிருக்கும் அதிருப்தியை 'காசாக்கி'க் கொள்ளப் போவது யார்? இதுதான் இன்றைய தமிழக அரசியலில் பரபரப்பாக அடிபட்டுக் கொண்டிருக்கும் கேள்வி! கோபால்சாமி, இளைஞர் பட்டாளத்தைத் தம்மோடு கொண்டு போய் விட்ட சூழலில், இழப்பைச் சரிகட்ட கலைஞருக்குத் துணை தேவைப் படுகிறது.

தமது சாணக்கியத்தைப் பயன்படுத்தி, காங்கிரஸின் இரு முக்கியப் பிரிவுகளையும் 'தொடர்பு கொள்ளும் தூரத்தில்' வைத்துக் கொண்டிருக்கிறார். காங்கிரஸும், கலைஞரும் கைகுலுக்க வேண்டும் என்று விரும்புகிறவர்கள் பட்டியலில், சு. சுவாமி, திருநாவுக்கரசு தவிர, ஜெவால் பழிவாங்கப்பட்ட சில் தொழிலதிபர்களும் சேர்ந்திருக்கிறார்கள்.

**எதிராளியின் பலவீனங்களையும் தவறுகளையும் நம்பியே ஒவ்வொரு கட்சியும் அரசியல் நடத்துகிறது தமிழகத்தில்....**

தமிழகத்தில் அடுத்த ஆண்டு தேர்தல் வரவேண்டுமென்ற நிலையில் திரைமறைவு வேலைகள் நடந்து கொண்டிருக்கின்றன. முரசொலி மாறன் பிஸியாக இருக்கிறார். அவரை மீண்டும் ராஜ்ய சபா உறுப்பினராகத் தொடர்ந்து செயல்பட வைக்க, காங்கிரஸ் உதவியை நாடும் திட்டமும் இருக்கிறதாம்.

காங்கிரஸ் தலைமையை ஜெவுக்கு எதிரான நிலைக்குத் திருப்ப பாடுபட்டுக் கொண்டிருக்கும் சுவாமி, 'கோபால்சாமி இல்லாத தி.மு.க.வோடு, சேருவதில் தப்பில்லை' என்று டெல்லியில் சொல்ல வேண்டியவர்களிடம் சொல்லிக் கொண்



**எக்கச்சக்க வாசகர்கள் மோட்டார் சைக்கிள் பரிசுப் போட்டியில் கலந்து கொண்டு திக்குமுக்காட வைத்து விட்டார்கள்! கூப்பன்கள், அசுரவேகப் பரிசீலனையில் உள்ளன. கூடிய விரைவில் முடிவை எதிர்பார்க்கலாம்!**

**— ஆசிரியர்**

டிருக்கிறார்.

தலைமை, தி.மு.க.வோடு சேர முடிவெடுத்தால், காங்கிரஸில், தங்கபாலு தலைமையிலிருக்கும் பிரிவு என்ன செய்யும்...?

"கட்சிக்கு எது நல்லது என்பதைச் சொல்லிப் பார்ப்போம். எடுபடவில்லையென்றால் கட்சிக் கட்டுப்பாட்டைக் காக்க, தலைமை வழி நடப்போம்" என்றார் அந்தப் பிரிவைச் சேர்ந்த ஒருவர்!

காங்கிரஸ் வட்டாரத்தில் நிலைமை இப்படியிருக்க, 'காங்கிரஸோடு உறவு' என்பதில் தி.மு.க. தொண்டர்களுக்குச் சிறிதும் விருப்பமில்லை என்பது பலரோடு பேசிப் பார்த்ததில் புரிந்தது. "1980ல் கூட்டு சேர்ந்து எங்கள் காலை வாரி விட்டார்கள். 1991-ல் ராஜீவ் கொலைப் பழியை எங்கள் மீது போட்டு விட்டார்கள். குறிப்பாக வாழப்பாடியோடு எந்தவிதமான உறவும் வைத்துக் கொள்ளக் கூடாது; அப்படி வைத்துக் கொண்டால் ஆயிரக்கணக்கான தொண்டர்கள் அதிருப்தியடைவார்கள்" என்கிறார்கள் அவர்கள்.

"திருமணம் போன்ற சமூக நிகழ்ச்சிகளில் கலந்து கொள்வது என்பது அரசியலுக்கு அப்பாற்பட்டுக் கடைப்பிடிக்க வேண்டிய பண்பாடு. இன்று தமிழகத்தில் ஸீனியர் தலைவர் கலைஞர். 'அந்த ஒரு status-க்கு ஏற்ப மரபுகளைக் காத்து வருகிறார். ஒரே மேடையில் தோன்றுவதை வைத்துக் கூட்டு ஏற்படும் என்று சொல்வதெல்லாம் சரியில்லை; கலைஞரே கூட இதை மறுத்து இருக்கிறார். அ.தி.மு.க. ஆட்சியை ஒழித்துக் கட்ட எதிர்க் கட்சிகளோடு நாங்களும் இணைந்து செயல்படுவோம் என்று வைத்துக் கொண்டாலும், அந்த உறவு தேர்தல் கூட்டு வரை செல்ல வாய்ப்பில்லை..." என்றும் சொல்கிறார்கள்.

"தமிழகத்தில் கோபால்சாமியோடு சேர்ந்துள்ள மார்க்ஸிஸ்ட் கட்சியினர், எங்கள் தொண்டர்களைக் குழப்புவதற்காகவே இது போன்ற கதைகளை அவிழ்த்து விட்டுக் கொண்டிருக்கின்றனர். ஆனால் உண்மையில் பார்க்கப் போனால் இன்று நரசிம்மராவ் ஆட்சி நீடிப்பதற்கும், ஒரிஸ்ஸாவில் காங்கிரஸ் ஆட்சிக்கு வந்ததற்கும் காரணம் மார்க்ஸிஸ்ட் கட்சிதான்" என்று ஒரு பிடிபிடித்தார் தி.மு.க. செய்தித் தொடர்பாளரான ஆலடி அருணா.

தி.மு.க. தொண்டர்கள் அவ்வளவு சுலபத்தில் தம்மை ஏற்றுக் கொள்ள மாட்டார்கள் என்பதை உணர்ந்ததாலோ என்னவோ, பெரம்பலூரில் வாழப்பாடியார் பேசும் போது '1991-ல் ராஜீவ் காந்தி கட்டளையை ஏற்றுச் செயல்பட்டேன். காலத்தின் சூழ்நிலைக்கு ஏற்ப கருத்துக்களை மாற்றிக் கொண்டு செயல்படுவதில் தப்பில்லை" என்றார்.

'காங்கிரஸைச் சேர்த்துக் கொள்வதை விட, தனித்துப் போட்டியிடச் செய்வதே தி.மு.க.வுக்குச் சாதகமான பலனைத் தரும்' என்ற ஒரு கருத்தும் தி.மு.க. இடைமட்ட தலைவர்களிடையே இருக்கிறது. தேர்தலுக்குப் பிறகு உண்டாகும் நிலைமையைப் பொறுத்து தோள் கொடுத்து தோழமைக் கட்சியாக மாறிக் கொள்ளலாம் என்கிறார்கள் அவர்கள்.

காங்கிரஸ் - தி.மு.க. உடன்பாடு உண்டாக வேண்டும் என்ற ஆர்வமோடு இருப்பவர்கள் ம.தி.மு.க.வினர்!

"எங்கள் நோக்கம் அடுத்த தேர்தலில் ஆட்சிக்கு வருவதல்ல; பலமான எதிர்க்கட்சியாக வந்தால் போதும். கலைஞர் காங்கிரஸோடு சேர்ந்தால் அதற்கடுத்த ஐந்தாண்டுகளில், கலைஞரோடு மிச்சம் மீதியிருக்கும் தொண்டர்களும் எங்களோடு வந்து சேருவார்கள்" - என்று நம்பிக்கையோடு சொல்கிறார் ம.தி.மு.க. தலைவர் ஒருவர்!

அரசியலில் நிரந்தரப் பகைவனும் கிடையாது; நிரந்தர எதிரியும் கிடையாது என்று சொல்வதுண்டு. அந்தப் பழமொழி மட்டும் நிரந்தரமாக இருந்து வருகிறது!

**— நமது நிருபர்**

படம் நன்றி : **தினமலர்**

விழாக்கால
வெகுமதி

தமிழ்ப்
புத்தாண்டை
முன்னிட்டு

உங்கள் முதலீட்டிற்கு

# 26%
வட்டி

+

# 3%
ரொக்க
ஊக்கத்
தொகை

**1.4.1995 முதல் 14.4.1995 வரைமட்டுமே**

மாதம், காலாண்டு, அரையாண்டு, ஆண்டு வட்டி
பின் தேதியிட்ட காசோலைகளாக முன்னதாகவே
வழங்கப்படுகின்றது.

# சரவணா
**கிரெடிட் அண்ட் இன்வெஸ்ட்மென்ட்ஸ்**

சிட்டி சென்டர் பிளாசா (முதல் மாடி) (எல்லீஸ் ரோடு முனை)
3, மவுண்ட் ரோடு, சென்னை - 2. போன்: 848486, 845462, 833828

சரவணனை நம்பியோர் வளம் பெறுவர்
சரவணாவில் முதலீடு செய்வோர் மேம் பெறுவர்.



# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி-1995

## முதல் பரிசு ரூ. 1,500

## இரண்டாவது பரிசு ரூ. 1,000

## மூன்றாவது பரிசு (இரு கதைகளுக்குத் தலா ரூ. 500 வீதம்) ரூ. 1,000

**ஆக மொத்தம் ரூ. 3,500 பரிசுகளாக வழங்கப் பெறும்.**

தவிர பிரசுரத்துக்கு, ஏற்கப்படும் ஒவ்வொரு கதையும் ரூ. 150 சன்மானம் பெறும். அறிமுக எழுத்தாளர்களுக்குப் போனஸ் உண்டு.

- கதைகள் சொந்தக் கற்பனை என்றும், இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் பிரசுரமானதில்லை என்றும் உறுதிமொழி தேவை.
- அறிமுக எழுத்தாளர் எனில் இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லை என்றும் போட்டி முடிவு அறிவிக்கப்படும் வரை எழுத மாட்டேன் என்றும் உறுதிமொழி தரவேண்டும்.
- நடுவர் குழு கதைகளைப் பரிசீலித்துப் பரிசுக்குரிய கதைகளைத் தேர்ந்தெடுக்கும்.
- கதைகளை அனுப்ப வேண்டிய கடைசித் தேதி : ஜூன் 15.
- உறையின் மேல் 'அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி' என்று குறிப்பிடுதல் அவசியம்.
- பிரசுரத்துக்கு ஏற்கப்படாத கதைகளைத் திரும்பப் பெற, போதிய அளவு தபால்தலை ஒட்டிய, சுயவிலாசமிட்ட உறையைக் கதையுடன் கூடவே அனுப்புதல் வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.
- கதைகள் கல்கியில் நாலு பக்கங்களுக்கு மேற்படாதிருப்பது நலம். ஒருவர் எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.
- எவ்விதக் கடிதப் போக்குவரத்தும் கிடையாது.
- சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.
- போட்டி முடிவும் முதல் பரிசுக் கதையும் ஆகஸ்டு 1 ஆண்டு மலரில் பிரசுரமாகும்.
- எழுத்தாளர்கள் பெருமளவில் உற்சாகத்துடன் கலந்து கொண்டு ஒத்துழைக்க வேண்டுகிறோம்.

**ஆசிரியர், கல்கி, 47, ஜவாஹர்லால் நேரு சாலை,**
**ஈக்காட்டுதாங்கல், சென்னை - 600 097.**






1995 ஏப்ரல் 9
பவ பங்குனி 26
மலர் : 53
இதழ் : 36

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. - பாரதியார்.



## அடுத்து வருவது ஆட்கொல்லி பட்ஜெட்!

மத்திய பட்ஜெட்டைப் போலவே தமிழ்நாட்டிலும் தேர்தலையொட்டி மாயாஜால பட்ஜெட் சமர்ப்பித்திருக்கிறார் நிதி அமைச்சர் நெடுஞ்செழியன். கேபிள் டீவி, ஹோட்டல் போன்ற சில இனங்களில் வரிக் குறைப்பின் பின்னணியை அலசினால் உள்நோக்கங்கள் தெரியவருகின்றன. தவிர, வரியே இல்லாத பட்ஜெட் சமர்ப்பிக்கப்பட்டிருப்பதாக அமைச்சர்கள் பெருமையடித்துக் கொள்கின்றனர். இது முழுப் பூசணியைச் சோற்றில் மறைப்பதாகும். ஏற்கெனவே உள்ள வரிகள் அப்படியேதான் உள்ளன. அவை மிக அதிகமான அளவில் விதிக்கப்பட்டுள்ளதால் புதிதாக வரி விதிக்கவில்லை என்பதுதான் உண்மை.

வரி, புதிதாக விதிக்கப்படவில்லையேயொழிய பட்ஜெட்டில் அரிசி விலைக் குறைப்பால் ஏற்படும் 150 கோடி இழப்பையும் சேர்த்து 176 கோடி பற்றாக்குறை உண்டு. இதற்கு என்ன அர்த்தம்? தமிழக அரசுக்கு நோட்டு அச்சடிக்கும் உரிமை இல்லை. அதனால் இந்த 176 கோடி அளவுக்கு ரிஸர்வ் வங்கியிடம்

தமிழக அரசு கடன்படும். இது இவ்வாண்டுக்கு மட்டும். ஏற்கெனவே உள்ள கடன், இந்தப் புதிய கடன் எல்லாவற்றையும் சேர்த்து வட்டியுடன் தமிழக மக்கள்தான் திருப்பித் தர வேண்டும். ஆக, அடுத்து வரும் பட்ஜெட்டுகள் மிகக் கடுமையாக அமைந்து, இந்தத் தொகையும் அதில் ஈடு கட்டப்பட வேண்டும். எனவே புதிய வரிகளும் இல்லாமல் போகவில்லை; அவை ஒத்திப் போடப் பட்டுள்ளன; அவ்வளவே!

கூடுதல் பட்ஜெட் என்பதாக ஒரு தந்திரத்தை வேறு கையாள் கிறார்கள். அதாவது, பட்ஜெட்டில் பல அம்சங்களை இடம்பெறாமல் விட்டு விட்டு, செலவு களைச் செய்த பிறகு, அந்தச் செலவினங்களைப் பிற்பாடு சட்டமன்றத்தில் சமர்ப்பித்து, மக்கள் பிரதிநிதிகளின் ஒப்புதலைப் பெற்று விட்டதாக நாடகமாடு கிறார்கள். அபரிமித மெஜாரிட்டி உள்ள அரசுக்கு இந்த தந்திரோபாயம் மிக எளிது. சென்ற ஆண்டு நடந்துள்ள இத் தகைய செலவினங்கள் இது எத்தகைய டம்பாச்சாரி அரசு என்பதை உணர்த்தும்.

உதாரணமாக உலகத் தமிழ் மாநாட்டினையொட்டி நடந்துள்ள ஆடம்பரச் செலவுகளைப் பாருங்கள் : கொசு ஒழிப்புக்கு 15 லட்சம்; விளம்பரச் செலவு 357 லட்சம்; பந்தல் மேடை அலங்காரம், அரசுக் கட்டடங்களைப் புதுப்பித்தல்

● *மகளிர் போலீஸ் ஸ்டேஷன் திறப்பு விழாக்களுக்காக செலவு 53 லட்சம்; ஹெலிகாப்டர் மற்றும் தனி விமானம் வாங்க 1900 லட்சம்...* ●




*.... ஜெ.ஜெ. திரைப்பட நகர் திறப்பு விழா செலவுகள் 85 லட்சம்; முதல்வர் மற்றும் அமைச்சர்களின் விமானப் பயணச் செலவுகள் 135 லட்சம்....*

146 லட்சம்; ஊர்வலத்தில் இடம்பெற்ற அலங்கார ஊர்திகளுக்கு 272 லட்சம்; கழிப்பிடங்கள் அபிவிருத்தி 212 லட்சம்; மேஜை, நாற்காலி, சோபாசெட் வகையறா 99 லட்சம்; பண்டங்களைச் சுமந்து போக போக்குவரத்து செலவு 18 லட்சம்; மாநாட்டு பிரதிநிதிகளுக்குத் தங்கும் வசதிகள் 42 லட்சம்; அரசு விருந்தினர்களுக்குத் தங்கும் வசதி 20 லட்சம்; பெட்ரோல், மற்றும் வாகன வசதிகள் 33 லட்சம்; ஒளி ஒலி ஏற்பாடுகளுக்கு 27 லட்சம்.

கூடுதல் பட்ஜெட் தமிழ் மாநாட்டுடன் முடிந்து போகவில்லை! அனைத்து மகளிர் போலீஸ் ஸ்டேஷன் திறப்பு விழாக்களுக்காக செலவு 53 லட்சம்; ஹெலிகாப்டர் மற்றும் தனி விமானம் வாங்க 1900 லட்சம்; ஜெ.ஜெ. திரைப்பட நகர் திறப்பு விழா செலவுகள் 85 லட்சம்; முதல்வர் மற்றும் அமைச்சர்களின் விமானப் பயணச் செலவுகள் 135 லட்சம் என்று நீண்டு கொண்டே போகிறது!

இப்படியெல்லாம் தண்டச் செலவு செய்யும் அரசு, 'வரியே இல்லாத பட்ஜெட்' என்று மாய்மாலம் செய்தால், அறியாமையில் உழலும் பாமர மக்கள், பாவம், நம்பித்தான் மோசம் போவார்கள். ஆனால் பொருளாதாரம் புரிந்தவர்களுக்குத் தெரியும், அடுத்து வரும் பட்ஜெட் ஆட்கொல்லி பட்ஜெட்டாக இருக்கும் என்பது.

# Kalki Shopping Page

## ரூபா கோல்டு கவரிங்




உத்திரவாதம் உடையது!

உபயோகித்திருந்தாலும் கம்பெனி நிபந்தனையின்படி பணம் திருப்பி தரப்படும்.

பர்தநாட்டியம் செட்டும் அமெரிக்கன் டயமண் செட் நகைகளும் கிடைக்கும்.

## கதம்ப மாளிகை

36, பாண்டிபஜார், தி.நகர், சென்னை-600 017.

## சேகர் பைனான்ஸியல் சர்வீஸஸ் (பி) லிமிடெட்

பங்கு, மியூச்சுவல் பண்ட், UTI, கம்பெனி டிப்பாஸிட்

விண்ணப்பங்கள் தபால் மூலம் அனுப்புகிறது மற்றும் ஏற்றுக் கொள்கிறது. ஆண்டுக்கு ரூபாய் 500 செலுத்தி உங்கள் பெயரை பதிவு செய்து கொள்ளுங்கள்.

விவரங்களுக்கு,

17, முதல் அவுன்யு,
அசோக் நகர்,
சென்னை - 600 083.
**Phone No : 4823651**

## DISCOUNT SALE
### ON 10 TO 15%

* RANI SAREES
* MADURAI SUNGUDI
* BENGAL COTTON SAREES

**FRESH STOCK — SUPER DESIGN FROM 1.4.95 TO 10.4.95 (Showroom open on Sunday 2.4.95 & 9.4.95)**

**MADURAI TEXTILES**

2, SIVAPRAKASAM ROAD,
PONDY BASAAR, MADRAS-17

(Nearer to Vegetable Market)

AVAILABLE ON WHOLE SALE ALSO.

# Kalki Shopping Page

தமிழ்ப் புத்தாண்டு வாழ்த்துக்கள்!

**New Music India**

**10% Discount Sale**
**Upto 14/04/95**

We sell HMV, MIL, MAGNA SOUND, CBS, MUSIC-TODAY, SANGEETHA, VANI, KEERTHANA, GITTA, THARANGINI, ECHO, AVM AND ALL COMPANY CASSETTES.

Cassettes in all languages Pooja, Carnatic, Hindustani Cassettes &
**CD'S are also available.**

Recording facilities are also available

7/4, L.B. Road, (Adyar Signal),
Adyar, Madras - 600 020.
Phone : 4918672

**ARC** மாயவரம்

**JEWELLERRS**

114, Kodambakkam
High Road,
(Between Valluvar Kottam
and Kodambakkam Bridge)
Madras - 600 034.
Ph : 8277944, 8277970

ARC என்றும் ராசி

*WIDE RANGE OF*
*GIFT ARTICLES*

GOLD — DIAMOND — SILVER

**GOLDEN OPPORTUNITY**

ஸ்ரீ ராமபிரானுக்குப் பாலம் அமைக்க சின்னஞ்சிறு அணிலும் மண் சுமந்தது. உங்கள் பொருளாதார முன்னேற்றத்துக்குப் பாலம் அமைக்க நாங்களும் உதவ முடியும்.

## நடராஜ் ஃபைனான்ஸ் அளிக்கிறது

●36 மாதங்களுக்கு ரூ.12,000 டெபாஸிட் செய்து 3 சவரன் தங்கக் காசுகள் பெறும் திட்டம், ●36 மாதங்களில் இரட்டிப்புத் திட்டம், ●மாதாந்திர வட்டி பெறும் திட்டம். ●'நடராஜன்' என்ற பெயர் உள்ளவர்கள் ரூ.5000 டெபாஸிட் செய்து ஒரு கிராம் தங்கக்காசு அதிகப்படியாக பெறும் திட்டம், ●பண்ணை வீடு சொந்தமாகும் திட்டம். ●சீட்டு குரூப்பில் கடன் வசதி திட்டம்.

24% P.A. + 4% பரிசு + 1% பென்ஷனர்

90 நாள் 6 மாதம் 12 மாதம் 24 மாதம் 36 மாதம்

✱ ஆயில் மில்ஸ் ✱ எக்ஸ்போர்ட்ஸ் ✱ பார்ம் ஹவுஸ் ✱ சீட்டு நிதி
✱ பப்ளிகேஷன்ஸ் - சித்திர ராமாயணம் ( தமிழ், இந்தி, இங்கிலீஷ் )

PHONE: 4342098, 4840150



**NATARAJ FINANCE & INVESTMENTS**
**NATARAJ CHITS(TAMILNADU)PVT.LTD.**
NATARAJ ESTATES FARM HOUSE PROMOTERS

"Shanthi Complex" 3rd floor, 26, Ranganathan St., T.Nagar, MADRAS-600 017.
B.O.1-B, Kamarajar Road, Kancheepuram-1.

adchoice

# Kalki Shopping Page




வருவது

# இளைஞர் வருடம்!

**'யு**வ' என்றால் புத்துணர்ச்சி, ஆரோக்கியம், சுறுசுறுப்பு.... alias இளமை; youth!

எனவே.... யுவ வருடம் எப்படி இருக்க வேண்டும் என ஃபாஸ்ட் ஃபார்வர்ட் செய்வதுடன் கடந்த 'பவ' எப்படி இருந்தது என்றும் 'ரீவைண்ட்' செய்து பார்க்கிறார்கள் சில யுவ குல திலகங்கள்:

**ஹரிசரண் (குருநானக் கல்லூரி)**

***ரீவைண்ட்*** : 'ஜுராசிக் பார்க்' படத்துக்காகக் காத்திருந்து காத்திருந்து காணக் கிடைத்தது. சினிமா தொழில் நுட்பத்துக்காகப் பார்க்கப் போய் பரிணாம வளர்ச்சி, புராதன உயிரியல் போன்றவற்றில் ஆர்வம் பிடித்துக் கொண்டது.

***ஃபாஸ்ட் ஃபார்வர்ட்*** : சின்ன பிரச்னை என்றாலும் என்னளவில் முக்கியம் - 'பம்பாய்' படத்தைப் பார்ப்பதா; வேண்டாமா? விமர்சனங்கள் 'சூப்பர்' என்று சொன்னாலும் படம் பார்த்த நண்பர்கள் 'ஸோ - ஸோ' என்றுதான் சொல்கிறார்கள்.

அப்புறம்... நான் ஒண்ணும் எம்.பி. சீட்டுக்கு ஆசைப்படல்லே; வெறும் எம்.பி.ஏ. சீட்தான் கேட்கிறேன். யுவ வருஷத்துல கிடைச்சுடாதா!

**தீபா (இந்துஸ்தான் பொறியியல் கல்லூரி)**

***ரீவைண்ட்*** : எந்த வகுப்பில் சேர்வது போன்ற கடுமையான சோதனைகளெல்லாம் பவ ஆண்டில் வந்தன. (இப்போ அந்தக் கவலையெல்லாம் போயே போச்!) முதன் முதலில் நெருக்கமான ஒருவரை இழக்கும் அனுபவம் இந்த ஆண்டில்தான் ஏற்பட்டது - ரொம்ப பாசம் வைத்திருந்த




# அசோக்நகர் பெனிபிட் பண்ட் லிமிடெட்

அரசு அங்கீகாரம் பெற்ற நிறுவனம் - 18/29996
22/5, டி.ஆர்.பி. காம்ப்ளக்ஸ், முதல் அவின்யு,
அசோக் நகர், சென்னை - 600 083.
(அசோக் பில்லர் அருகில்) போன் : 4825758

## முதியோர் நலத் திட்டம் 21%

ரூபாய் 10,000/- மும் அதற்கு மேலும் - காலம் ஒரு ஆண்டு

## வளரும் (பெண்) குழந்தை நலத் திட்டம்

| வயது | டெப்பாசிட் ரூ. | மாதங்கள் | திரும்பப்பெறும் தொகை. ரூ. |
|---|---|---|---|
| 1 | 1000/- | 240 | 64,000/- |
| 1 | 3000/- | 240 | 1,92,000/- |
| 1 | 5000/- | 240 | 3,20,000/- |
| 5 | 15000/- | 180 | 3,60,000/- |

## பெண்களுக்கான சிறப்புப் பாதுகாப்புத் திட்டம்

| டெப்பாசிட் தொகை ரூ. | வருடங்கள் | திரும்பப் பெறும் தொகை. ரூ. |
|---|---|---|
| 300/- | 21 | 20,000/- |
| 500/- | 21 | 35,000/- |
| 1000/- | 21 | 70,000/- |

## அசோகா பணம் திரும்பப் பெறும் திட்டம்

| டெப்பாசிட் தொகை. ரூ. | திரும்பப் பெறும் தொகை. ரூ. | | |
|---|---|---|---|
| | 5-ம் ஆண்டு | 10-ம் ஆண்டு | 15-ம் ஆண்டு |
| 6320/- | 6000/- | 6000/- | 56,320/- |

## ABF ஆயுட்கால நலத்திட்டம் - I

| டெப்பாசிட் தொகை ரூ. | 3-ம் ஆண்டு நிறைவிலிருந்து திரும்பப் பெறும் தொகை ரூ. |
|---|---|
| முதல் ஆண்டு - 2000/-<br>2-ம் ஆண்டு 2000/- | 1000/- ஒவ்வொரு ஆண்டும் |

## ABF ஆயுட்கால நலத்திட்டம் - II

| டெப்பாசிட் தொகை. ரூ. | 2-ம் ஆண்டு நிறைவிலிருந்து திரும்பப் பெறும் தொகை ரூ. |
|---|---|
| 5000/- | 1250/- ஒவ்வொரு ஆண்டும் |

**உங்கள் பணத்திற்கு முழு பாதுகாப்பு**
**உங்கள் தேவைக்கு பூரண சேவை**

தங்க நகைகள், வீடு மற்ற செக்யூரிட்டிகளின் பேரிலும் கடன்கள் வழங்கப்படும்.

இயக்குனர்கள் :

வே. சுதர்சன், B.Sc., D.M.I.T., M.E., M.B.A. இண்டஸ்ட்ரியலிஸ்ட்

சா. சந்திரசேகர் M.Com., நிதி ஆலோசகர், சேகர் பைனான்ஸியல் சர்வீஸஸ் (பி) லிட்

வை. வேலம்மாள்

பெரியப்பா. இனி, எனக்குத் தெரிஞ்ச யாரும் சாகக் கூடாது!

*ஃபாஸ்ட் ஃபார்வர்ட் :* உலக அழகிகள் தேர்வானால் போதுமா? இதர துறைகளிலும் இந்தியா முத்திரை பதிக்க வேண்டும்.

**கோபாலகிருஷ்ணன் (விவேகானந்தா கல்லூரி)**

*ரீவைண்ட் :* என் அபிமான ஸ்டெஃபி கிராஃபின் ஆட்டம் சூடு குறைந்து விட்டதே! நான் பொடிப் பொடியாகி விட்டேன்! இந்த ஆண்டுதான் தினம் தினம் கோயிலுக்குப் போகும் பழக்கம் எனக்கு உண்டாயிற்று. மனகல ஏக உற்சாகம் தரும் விஷயம். பெரிசுங்களுக்கு மட்டுமில்ல ஆன்மிகம்.

*ஃபாஸ்ட் ஃபார்வர்ட் :* பழைய ஆக்ரோஷ ஸ்டெஃபியைப் பார்க்கணும். அப்புறம், இந்தியாவில் ஊழல் ஒட்டுமொத்தமாக ஒழிய வேண்டும்! - 'மறை கழண்டுடுச்சு'ன்னு என்னைத் திட்டாதிங்க; ஏதாவது ஒரு துறையிலயாவது நான் நினைக்கிறது நடக்காதா!

**சுபாஷினி (ஸ்ரீ வேங்கடேஸ்வரா பொறியியல் கல்லூரி)**

*ரீவைண்ட் :* ஓர் அனுபவப் பாடம்தான் முதலில் நினைவுக்கு வருது. மதுரையிலிருந்து சென்னை வர குடும்பம் முழுமைக்கும் டிக்கட் எடுத்திருந்தோம். குறித்த நாளில் ஸ்டேஷன் போனால் எங்களுக்கு சீட் இல்லை! தவறு எங்கள் பேரில்தான் - டிக்கட் சென்னை-மதுரை ரூட்டுக்கு வாங்கப்பட்டிருந்தது! முன்கூட்டியே சரி பார்த்திருந்தால் டிக்கட்டை கான்ஸல் செய்திருக்கலாம்.

*ஃபாஸ்ட் ஃபார்வர்ட் :* சோனி கே பீசே மாதிரி ஆபாச வார்த்தைகளில்லாமல் தமிழ், இந்தி சினிமா பாடல்கள் முன்னேற வேண்டும்.... இசையைப் போலவே...

ஜாதி, இட ஒதுக்கீடு என்ற போர்வையில் அரசியல் பண்ணுவோர் நசுக்கப்பட, பொருளாதார பலவீனர்களுக்கு ஒதுக்கீடு முறை வேண்டும். இதற்கான விதையையாவது யாரேனும் தூவ மாட்டார்களா?

**ராஜேஷ் (லயோலா கல்லூரி)**

*ரீவைண்ட் :* கல்லூரி வட்டாரங்களில் 'போன வருடம் இறக்குமதியாகியிருக்கிற விஷயம் 'ஹோலி' கொண்டாட்டம். ஹோலி, ஜாலிதான் - மாணவிகளை 'ஓவராக'க் கிண்டல் பண்ணாதவரை.

*ஃபாஸ்ட் ஃபார்வர்ட் :* யுவ வருடமாவது 'கட் அவுட் கலாசார'த்துக்கு 'கெட் அவுட்!' சொல்லணுமே! அபாச்சே இன்டியனின் 'நோ ரிசர்வேஷன்ஸ்' போல ஏ.ஆர். ரகுமான் ஒரு காஸட் கொடுக்க வேண்டும். அப்புறம் சர்வதேச 'ஸ்டார்' ஆயிடுவார். அவரால் அது முடியும். 'ஜுனூன் தமிழுக்கு முடிவுகட்டி தொலைக்காட்சியில் ஒழுங்கான மொழி பெயர்ப்புக்கு வழி செய்வார்களா....?

**— ஜி.எஸ்.எஸ்.**

அட்டையில் : ரவீந்தர், சுவாமிநாதன், அபர்ணா, ப்ரியா, சங்கீதா, கிஷோர்.

வண்ணப்படங்கள் : **காமெரா திருஞானம்.**

கட்டுரைக்கான படங்கள் : **ராஜு நாராயண்.**

## விரோதியும் உண்டு; மன்மதனும் உண்டு!

பிரபவ முதல் அக்ஷய வரை அறுபது ஆண்டுகளுக்கும் அறுபது பெயர்கள். விரோதி, விக்ருதி, குரோதி, ராக்ஷஸ, ரக்தாக்ஷி என்று மிரட்டும் பெயர்களும் உண்டு; ஆனந்த, ஜய, மன்மத, ஸ்வபானு என்று தேன் தடவிய பெயர்களும் உண்டு! இவையெல்லாமே மனித சுபாவத்தைக் குறிக்கும் பெயர்கள் என்கிறார்கள். பின்னணியில் ஒரு கதையிருக்கிறது:

ஒரு முறை நாரதர் மகாவிஷ்ணுவை 'விஸிட்' செய்தார். அப்போது நாராயணன் அருகில் இருந்த லக்ஷ்மி தேவி சட்டென்று எழுந்து போய்விட, நாரதருக்கு 'சுருக்' கென்று வேதனை.

''இந்திரியங்களை அடக்கிய என்னைப் பார்த்து தேவியார் இடம் பெயர்வானேன்?'' என்று அவர் விஷ்ணுவைக் கேட்க, மஹாவிஷ்ணு, ''மாயைக்கு ஆட்படாதவர்களே இருக்க முடியாது!'' என்று சொல்லியிருக்கிறார். அதை நிரூபித்துக் காட்ட, நாரதரை பூவுலகுக்கு அழைத்து வந்து, ஒரு தடாகத்தில் மூழ்க வைத்துவிட்டு, தாம் மறைந்து விடுகிறார்.

தடாகத்திலிருந்து 'நாரதி' என்ற பெண் வடிவில் முனிவர் வெளிப்பட்டு, மாயைக்கு உட்பட்டு, காலத்வஜன் என்ற அரசனை மணந்து, அறுபது குழந்தைகளைப் பெறுகிறாள்! அறுபது பேரும் அண்டை நாட்டுடனான போரில் இறந்துவிட, நாரதர் மீண்டும் பழைய நிலை....

அறுபது குழந்தைகளுக்கும் அறுபது மனித குணங்கள் பெயர்களாக வைக்கப்பட்டன. காலத்துவஜனின் அந்த அறுபது குழந்தைகளின் பெயர்களே இன்று ஆண்டுகளின் பெயர்கள்!

**— 'யெஸ்பால்'**

## மன்மோகன் சிங்குக்கு யார் கட்-அவுட் வைப்பது?

♦ வட்டமேஜையில் சுப்பிரமணியம் அவர்களின் கடிதம் (கல்கி 26.3.95) கண்டு களிப்புற்றேன்! தாம்பரம் அருகே கோயிலை இடித்து உதவ, குடந்தை மகாமகக் குளத்தில் தோழியுடன் ஜலக்கிரீடை செய்து நூற்றுக்கணக்கானவர்களுக்கு 'மோட்சம்' கொடுக்க, வாரந்தவறாமல் தமிழகக் கோயில்களில் கொள்ளை நடக்க, அகிலாண்டேஸ்வரி 'ஜெ'யைத் தவிர வேறு யாரால் அருள் புரிய முடியும்?

திருச்சி - 6,
எஸ். பார்த்தசாரதி.

♦ 'பிரிதொரு தபா' என்று எனது கதைக்குத் தலைப்பிட்டிருந்தீர்கள். 'பிறிதொரு' என வல்லின 'றி' அல்லவா வர வேண்டும்? 'பிறிதொரு தபா' தவறு வராமல் பார்த்துக் கொள்ளுங்கள்.

சென்னை - 45, சுப்ரபாலன்.

♦ அரசாங்கத்தின் உற்பத்திக்கு உதவாத ஆடம்பரச் செலவினங்களைக் குறைத்துக் கொண்டாலே, பட்ஜெட் பற்றாக்குறை வெகுவாகக் குறைந்துவிடும் என்று தாங்கள் கூறியிருப்பது நூற்றுக்கு நூறு உண்மை. ஆனால், இது செவிடன் காதில் ஊதிய சங்கு போல் அல்லவா!

வடகரை, பாலு.

♦ தலையங்கம், இன்றைய எந்த அரசியல்வாதியின் சிந்தனையையும் தூண்டப் போவதில்லை. நிதியமைச்சர்களில் மிகச் சிறந்தவராக நீங்கள் பாராட்டுகிற மன்மோகன் சிங்கின் வழிகாட்டுதலில் நடைபோடுகின்ற காங்கிரஸ் கட்சிதான் நாடெங்கும் கல்லடி பட்டு வருகின்றது. லஞ்சம் வாங்குவதும் கொடுப்பதும் பாரத தேசத்தின் பண்பு என்று மாறி விட்ட நிலையில் மக்களின் கதி மோட்சத்திற்கு எது வழி என்று தான் தெரியவில்லை. பாவம் மன்மோகன்சிங்! அவருக்கு யார் 'கட்-அவுட்' வைப்பது?

கோவை - 25,
தி. ரங்கசாமி.

♦ எஸ்.பி.பி. 'டயட்'டில் இருக்கிறார் என்ற வரிகளைப் படித்ததும் ரொம்ப வருத்தப்பட்டேன்!

அரவக்குறிச்சிப்பட்டி,
எம். அசோக்ராஜா.

♦ கவர் ஸ்டோரி படித்தேன். உடல் பருமனானவர்களுக்கு இவ்வளவு பிரச்னைகள் உள்ளதை எண்ணும் போது உடல் குண்டாக வேண்டும் என்ற என் நீண்ட நாள் ஆசை ஒல்லியாகி விட்டது!

மருங்கூர்,
பால கிருஷ்ணமூர்த்தி.

♦ "கிட்னி தானத்தால் கேடு வராது" என்ற மிக விவரமான மருத்துவக் கட்டுரையை எவ்வளவு பாராட்டினாலும் தகும். "எனக்கே தெரியாமல் என் கிட்னியை எடுத்து விட்டார்கள்!" என்பதாகப் பலர் குறை கூறியது எள்ளளவும் உண்மையல்ல என்று இக்கட்டுரை தெளிவாக விளக்கி விட்டது!

கோவை - 2, ந. சேதுராமன்.

♦ கேபிள் டீவி. ஆபரேட்டர்களின் குமுறல் மிகவும் வேதனையானது. இனி அவர்கள் எப்படித்தான் தொழில் நடத்தப் போகிறார்களோ? புத்தாண்டு பிறக்கட்டும், பார்க்கலாம்!

நாகப்பட்டினம்,
என். மாலதி சுகுமாறன்.

♦ பம்பாய் படத்திற்கு விரிவான விமர்சனம் எழுதிய நீர், ஏ.ஆர். ரஹ்மானின் இசை குறித்து ஏதும் குறிப்பிடாதது ஏமாற்றம் அளிப்பதாய் இருந்தது.

விசலூர் - 1,
ஜி. ஜி. கிருஷ்ணன்.

♦ தமிழுக்கு வரவிரும்பும் சாந்தி கிருஷ்ணாவின் ஆணித்தரமான சொற்களில் நியாயமே மேலோங்கி இருந்தது. அது சரி, ஜெயபாரதிக்கு ஏன் இந்த வேண்டாத வேலை?

திருச்சி - 8, மா. நளினி.

♦ முதல்வரின் பாசத்திற்குப் பாத்திரமான ரோஸி இறந்துவிட்டதால் எனக்கும் தாளாத வருத்தம்தான். நன்றியுள்ள நாயான ரோஸி இறந்தது, முதல்வருக்கு மட்டுமல்ல; நாய்களின் வர்க்கத்திற்கே ஈடு செய்ய முடியாத இழப்பு! நாய் உலகத்தின் ஒரு பெரும் தூண் சாய்ந்து விட்டது. (நறநற)

இலால்குடி,
ஆங்கரை பைரவி.

♦ "முத்துராமனின் சிறந்த பண்புகளை கே. பி. நினைவு கூர்ந்திருந்த விதம் மிகவும் அருமை.

கோவை - 6,
ஏ.ஜி. கல்யாணசுந்தரம்.

சௌதாமினிக்குத் துக்கம் துக்கமாய் வந்தது. அதை விடத் தூக்கம் தூக்கமாய். 'நியூஸ் அட் டென்'னில், சுகன்யா பாலகிருஷ்ணன் கூட, எல்லாரையும் ரொம்பத் தெரிந்தவள் மாதிரி ஒரு முறை சிரித்துவிட்டுச் செய்திகளை வாசிக்கத் தொடங்கிவிட்டாள்....

'எங்கேதான் போனார் இவர்? எங்கே போவதானாலும் சொல்லிக் கொண்டு போக மாட்டாரோ ஒரு மனிதர்?'

காலிங் பெல் அலறியபோது, சந்திரசேகர்தான் என்று நினைத்துக் கதவைத் திறந்தாள்.

பக்கத்து ஃப்ளாட் சாரதா.

"பப்லு தூங்கியாச்சா?" என்றாள். கையில் ஒரு கொத்து விளையாட்டுச் சாமான். பப்லு அவள் ஃப்ளாட்டில் விளையாடப் போய், அங்கேயே விட்டு வந்திருக்கும்.

"அப்பா ஏன் வரலைன்னு ஏகமா அடம் பண்ணிட்டு இப்பத்தான் தூங்கித்து."

"என்ன அதிசயமா நியூஸ் பார்க்கிறே இன்னிக்கு?"

"மணி பத்து தாண்டியாச்சு. இவர் இன்னும் வீட்டுக்கு வரல்லே...."

"இது டெல்லி நியூஸ் ஆச்சே. இதுல எல்லாம் காணாமல் போறவனைப் பத்திச் சொல்ல மாட்டானே?"

"ஐயோ, போது போகலேன்னு நியூஸ் போட்டேன் சாரதா. அவ்வளவுதான்!"

"அவருக்கு எதெதில் எல்லாம் இன்ட்ரஸ்ட் உண்டு? சொல்லு!"

"மீட்டிங், அது இதுன்னு போவார்தான். ஆனா எட்டரை மணிக்கு மேல பசி தாங்காது. நானி பல்கிவாலா லெக்சர்னாக்கூட, இடத்தைக் காலி பண்ணிடுவார்!"

"இன்னிக்கு எங்கயாவது போறேன்னாரா?"

"இரு. எங்கேஜ்மென்ட்ஸ்ல என்ன என்ன இருக்குன்னு பேப்பர்ல பார்க்கறேன்."

'ஹிண்டு'வைப் பிரித்து வைத்துக் கொண்டாள்.

"கன்ஸ்யூமர் ஆக்டிவிடீஸ் குரூப். அடையாறு. ஹ்ம்... போக சான்ஸ் இருக்கு. ஏன்னா எலக்ட்ரிசிடி எப்பவும் போய் வந்து அவஸ்தையாய் இருக்கு. கம்ப்ளெயின்ட் கொடுக்கணும்னார்... அப்புறம்... என்வயர்மென்டல் அவேர்னஸ் ஸ்டடி டீம்... ம்... இங்கயும் அவர் போறதுக்கு சான்ஸ் இருக்கு. எப்பவும் ஓசோன், ஓசோன்பார். ஆங்... இதோ பார். ஸ்ரீலஸ்ரீ இடியாப்ப சுவாமிகளின் சீடர், யாரோ, தலைச்சுழி ரகசியங்கள் பற்றிப் பேசறாராம்..."

"என்னது! சாமியாருக்கெல்லாம் சாப்பாட்டு ஐட்டம் பேரா? என்ன அக்கிரமமா இருக்கு!"

"சாரதா, எனக்கென்னவோ இவர் இங்கதான் போயிருப்பார்னு தோணறது. நேத்து ஏதோ பத்திரிகையில் இதைப் பத்தி வாய்விட்டுப் படிச்சார். பிரம்மாதான் ஒரு ஜீவனின் தலைவிதியை நிர்ணயித்து எழுதறானாம். அப்போ ஒரு சுழியுடன் அந்த ஜீவன் பிறக்கிறதாம். அதுதான் கடவுளோட கையெழுத்தாம்!"

"சே! நம்ம மண்டை என்ன, கடவுள் கையெழுத்துப் போடற ஆட்டோகிராஃப் புக்கா?"

"பிரம்மா நிர்ணயித்த தலைவிதி ரொம்பக் கடினமா இருந்தா, சிவன் அதைக் கொஞ்சம் மாத்தி எழுதிவிடுவாராம். அப்போ அந்தச் சுழியும் சேர்ந்து சில பேருக்கு ரெட்டைச் சுழி



## சாருகேசி

# காத்திருந்து, காத்திருந்து....

இருக்குமாம்.".

"ரெட்டை மண்டைதான் பார்த்திருக்கேன். ரெட்டைச் சுழியா? சுழியெல்லாம் கூட மாட்டுக்குத்தானே பார்ப்பா? மாட்டுப் பொண்ணுக்கும் கூடப் பார்ப்பாளோ?" என்று ராத்திரி பத்தரை மணி என்றும் பாராமல் 'கடி'த்தாள் சாரதா.

சௌதாமினிக்கு அவளை ஓர் அறை அறையலாம் போல் ஆத்திரம் வந்தது. அடித்தால் அவளுக்கு வலிக்காது. தனக்குத்தான்.

பதினோரு மணி வரை நன்றாக 'அறுத்து' விட்டு, தன் ஃப்ளாட்டுக்குப் போய்ச் சேர்ந்தாள் சாரதா.

**ப**யம் என்றால் இப்போதுதான் என்ன என்று தெரிந்தது சௌதாமினிக்கு. மாடிப்படி விளக்கை அணைக்கப் போகக்கூடப் பயமாயிருந்தது. கல்யாணமாகி இந்த நாலு வருடங்களில் இது போல நாலு முறை நடந்திருந்தால் முன் அனுபவமாவது இருந்திருக்கும்.

காலிங் பெல் மறுபடி அலறியது. தூக்கிவாரிப் போட்டுக் கொண்டு எழுந்த பப்லுவைத் தட்டித் தூங்க வைத்துவிட்டு அவசரமாக வாசல் பக்கம் போனாள்.

அவர்தானோ? வேறு யாராவதாய் இருந்து தொலைத்தால்? திறக்கிறதா, வேண்டாமா...!

எதற்கும் சமையலறைக்குப் போய் ஒரு பெரிய கரண்டி, ஒரு தோசை திருப்பி, போன தீபாவளிக்கு லட்டு பிடிக்க வந்த சமையல்காரர் மறந்து வைத்துவிட்டுப் போன பெரிய ஜாரணி, ஓர் இடுக்கி (மூக்கை அப்படியே இடுக்கிப் பிடியாய் இறுக்கிக் கொள்ள) எல்லாவற்றையும் எடுத்துக் கொண்டு, கொண்டைய ராஜு படம் போல நாலுகை காளி மாதிரி நின்று கொண்டு கதவைத் திறந்தால் —

கீழே இருக்கிற வாட்ச்மேன்!

"மாஜி! ஏ க்யா ஹை! குச் ஹுவா க்யா?"

பயம் போய், வெட்கம் பிடுங்கித் தின்ன, "ஒண்ணுமில்லே பகதூர்... சமையல் வேலை... பாதி பாக்கி இருக்கு..." என்று உளறினாள்.

"தோடா சாம்பார் சாஹியே மா-ஜி!" என்றான் பகதூர்.

சனியன்! சாம்பார் கேட்




**தலைமை தேர்தல் அதிகாரி சேஷன் ஓட்டு போட முடியாது! சேஷன் முன்பு உத்தரபிரதேச மாநிலம் டேராடூன் நகரில் எண்ணெய் மற்றும் இயற்கை எரிவாயு நிறுவனத்தில் வேலை பார்த்தார். அப்போது வாக்காளர் பட்டியலில் அவர் பெயர் சேர்க்கப்பட்டிருந்தது. என்றாலும் அவரை பெண் என்று குறிப்பிடப்பட்டிருந்ததால் வோட்டுப் போட முடியாது போய்விட்டது! லக்னோவில், பல்கலைக் கழக விழா ஒன்றில் பேசியபோது இத்தகவலை நகைச்சுவையாகக் குறிப்பிட்டார்.**

**— எம். இராஜேந்திரன்**

கிற நேரமா இது?

சந்திரசேகர் வந்து இனி சாப்பிடப் போவதில்லை. சாம்பாரை எல்லாமே இவனுக்குக் கொடுத்தால் தப்பில்லை என்று, இருக்கிறதை அப்படியே அவனிடம் கொடுத்தாள்.

கதவை அறைந்து சாத்திவிட்டுப் படுக்கையில் வந்து உட்கார்ந்து கொண்டாள் சௌதாமினி.

"எதுக்கு இந்த எக்ஸ்நோரா, ஒய்நோரா எல்லாம்? கஞ்சா காய்ச்சற பேர்வழி எல்லாம் கறுவிண்டு இருக்கானாம். நீங்க ஏதோ சமூக சேவைன்னு போக, எவனாவது ஒரு கல்லைத் தூக்கிப் போட்டு உங்களை க்ளோஸ் பண்ண மாட்டானா?" என்று ஒரு நாள் கேட்டாள்.

காரணம், உண்மையில் ஒரு கஞ்சா பேர்வழி மிரட்டிவிட்டுப் போனதுதான்.

"அவன் இருக்கறதோ வேற தெரு. நீங்க எதுக்கு அங்க போய் உங்க வேலை எல்லாம் ஆரம்பிக்கணும்?" என்றாள் பொறுக்க முடியாமல்.

"இதுக்கெல்லாம் பயந்தா சோஷியல் ஆக்டிவிடிஸ்ல இறங்கவே முடியாது சௌதா. பாரேன், நாளைக்கு அவனே குப்பை வாரறதுக்கு ட்ரை சைக்கிள் வாங்கித் தரேம்பான்!"

"ட்ரை சைக்கிள் வாங்கித்தர மாட்டான் - உங்களுக்கு சைக்கிள் செயின்னா என்னன்னு காமிப்பான்!"

அன்று கோபத்தில் தான் பேசியது போல் நிஜமாகவே நடந்திருக்குமோ?

'போலீஸு'க்கு போன் பண்ணலாமா?' அப்படி போன் செய்து பத்து நிமிஷத்தில் புருஷன் வந்து நின்றால்...

'நீ எப்பவுமே இப்படித்தான் ஓவர் ரியாக்ட் பண்ணுவே' - கத்துவான். வேண்டாம்!

பெட்ரூமில் போய், படுக்கையில் உட்கார்ந்து கொண்டாள். எதிரே காத்ரெஜ் அலமாரிக் கண்ணாடியில் அவள் உருவம் தெரிந்தது. தலைப்பு நழுவி, தலை லேசாகக் கலைந்து, ஒருவித அலாதிக் கவர்ச்சியுடன்....

அய்யோ! எவனாவது அவர் இல்லை என்று தெரிந்து கொண்டு உள்ளே நுழைந்து விட்டால்?

பால்கனிக் கதவைத் திறந்து வைத்திருந்தது திடீரென்று நினைவுக்கு வந்தது. காலில் கேஸ் சிலிண்டர் இணைத்திருப்பது மாதிரி கனத்தது. ஓர் அடி கூட எடுத்து வைக்க முடியாமல் கனத்தது. எவனாவது பால்கனியில் ஏற்கெனவே ஒளிந்திருந்து, கப்பென்னு இறுக்கிக் கட்டிப் பிடித்து....

இருக்கிற தைரியத்தை எல்லாம் கடைசி அயோட்டா வரை திரட்டி எடுத்துக் கொண்டு கட்டிலை விட்டு இறங்கினாள்.

கோட் ஸ்டாண்டில் தொங்கிய குடையை நீட்டி, பால்கனி கதவை ஒரு தள்ளுத் தள்ளிச் சாத்தினாள். சட்டென்று பாய்ந்து போய் 'போல்ட்'டைப் போட்டாள்.

அப்பாடா!

விளக்கை அணைத்துவிட்டு, கட்டிலில் மறுபடி உட்காரலாம் என்று ஸ்விச்சில் கை வைப்பதற்குள் கரண்ட்டே போய்விட்டது!

இருட்டுக்குள் இருக்கிற போது இன்னும் பயமாக இருந்தது. தாக்குவதற்குத்தான் யாரோ முன்னாலேயே 'லைட்'டை எல்லாம் அணைத்து விட்டிருப்பார்களோ? வீட்டுக்குள்ளேயே திருடன் ஒளிந்திருக்க, 'வெயிட் அன்ட்டில் டார்க்'கில் ஆட்ரி ஹெப்பர்ன் குருடியாக நடித்தது நினைவுக்கு வந்தது. இருட்டில் நடப்பதும், குருடியாய் நடப்பதும் ஏறக் குறைய ஒன்றுதான்...

அதிகாலையில் ஐந்து மணிக்கு விழிப்பு வந்த போது, கரண்ட்டும் வந்து, பெட்ரூம் விளக்கு எரிந்து கொண்டிருந்தது. அணைத்துவிட்டு, பல் துலக்கிவிட்டு வருவதற்குள், பால்பாக்கெட்டுகள் சின்ன முயல் குட்டிகள் மாதிரி வாசல் கதவருகில் கிடந்தது.

காப்பி குடித்து, வெளிச்சம் வந்ததும்




**டைம்ஸ் ஆஃப் இந்தியாவின் தலையங்கத்தில் ஒருமுறை (13.2.92 அன்று) 42 வரிகளில் 48 தவறுகள் இருந்தன. அது கம்ப்யூட்டரினால் ஏற்பட்ட தவறு. இதில் உலக ரிகார்ட் என்னவென்றால் 22.8.78 அன்று வெளி வந்த 'தி டைம்ஸ்'ல் 5.5 ஒருகால அளவில் 97 தவறுகள் இருந்தது தான்.**

**ஆதாரம் : மனோரமா இயர் புக் 1995**
**தகவல் : ஸ்ரீகாந்தன்**

கொஞ்சம் தெம்பாய் இருந்தது. எதற்கும் ஒன்பது மணி ஆகட்டும். அவர் ஆபீசுக்குப் போன் பண்ணி மானேஜரிடம் கேட்கலாம் என்று மனசுக்குள் தீர்மானித்தாள்.

ஒன்பது மணி.

ஆபீசுக்கு போன் செய்தபோது மணி அடிக்கிற சத்தம் மட்டும் கேட்டுக் கொண்டே இருந்தது. இன்னுமா மானேஜர் வந்திருக்க மாட்டார்? எட்டுக்கே தினசரி வந்துவிடுவாரே?

பத்து மணிக்கும் அதே கொர் கொர் தான்.

அசிஸ்டென்டைக் கூப்பிட்டாள். அவளுக்கும் கிடைக்காமல் போகவே, "ஃபால்ட் ரிப்போர் கம்ப்ளெயின்ட் கொடுத்திருங்க, மேடம்!" என்று சொல்லிவிட்டாள்.

எரிச்சலாய் வந்தது சௌதாமினிக்கு.

புறப்பட்டு நேராக ஆபீசுக்கே போய் விட்டால்?

ஒரு ஆட்டோ பிடித்து மானேஜரிடம் போய், இவர் நேற்று இரவு முழுக்க வரவே இல்லை வீட்டுக்கு என்று சொன்னால் என்ன?

ஏதோ கெட்ட சகவாசம் இருக்கிறது என்று மனைவி ஆபீசுக்கு நேராகவே சந்தேகப்பட்டுக் கொண்டு வந்துவிட்ட மாதிரி அவர்கள் நினைத்து விட்டால்?

ஐயோ, வேண்டாம்டா சாமி!

பிற்பகல் வரை என்ன செய்வது என்றே தெரியவில்லை.

செய்தித்தாளைப் பிரித்து வைத்துக் கொண்டு ஓர் அங்குலம் விடாமல் படிக்க ஆரம்பித்தாள்.

பன்னிரண்டு மணிக்கு விர்விர் விர்ரென்று காலிங் பெல் அலறியது. அடிபட்ட அவரை யாராவது ஸ்ட்ரெச்சரில் தூக்கிக் கொண்டு வந்திருப்பார்களோ?....

விழுந்தடித்துக் கொண்டு போய்க் கதவை அகலமாகத் திறந்தாள் சௌதாமினி.

சந்திரசேகர்!

''என்ன ஆச்சு உங்களுக்கு? எங்க போயிட்டீங்க நேத்து, வீட்டுக்கே வராம?''

சந்திரசேகர் முகத்தில் ஒரு நாள் தாடியோடு நின்றான்.

"ரொம்ப ஸாரி சௌதாமினி! எல்லாம் நம்ம பப்லுவாலதான்...."

"இப்படி ஊர் மேஞ்சுட்டு வந்து - முழுசா அம்மான்னுகூட இன்னும் சொல்ல வரலை, அந்தக் குழந்தை மேல பழிபோடறீங்களே!"

"இல்ல சௌதா... ஆபீஸ் விட்டு வரச்சே 'ஜாலமந்திர்' ஸ்கூல் வழியா வந்தேனா, அங்க பெரிய கியூ நின்னுது. விசாரிச்சா எல்.கே.ஜி. அப்ளிகேஷன் தராதாச் சொன்னாங்க. நீ பப்லுவை 'ஜாலமந்திர்'லதான் படிக்க வைக்கணும்னு ஜூனூனா சொல்லிட்டியே, அதான் நானும் போய் கியூவுல நின்னுட்டேன். அப்புறம் விசாரிச்சா, காலையிலதான் ஃபார்ம் குடுப்பாங்கன்னு தெரிய வந்தது. 'கொஞ்சம் என் இடத்தைப் பாத்துக்குங்க; ஒய்ஃபுக்கு போன் பண்ணிட்டு வரேன்'னு சொன்னா ஒரு பயலாவது கேட்டாதானே? அவனவன் துண்டை விரிச்சுப் படுத்துட்டான்; பதினொண்ணரைக்குத்தான் ஃபாரம் கிடைச்சுது; வாங்கிட்டு நேர வரேன்...."

தொப்பென்று சோபாவில் சரிந்தான் அவன்.

*** புறா காக்கையுடன் சிநேகமாக இருந்தால் அதனுடைய இறக்கை வெள்ளையாக இருக்கலாம். ஆனால் அதனுடைய மனம் கறுப்பாகவே இருக்கும்.**

**ஜெர்மன் பழமொழி**
**— இ.எஸ். பட்டப்பா**






உங்க கூட வாக்கிங் போய் போய், நான் மெலிஞ்சதுதான் மிச்சம்!


ஹும்...வயசாயிடுச்சு..!


DANGER
1000 VOLTS





மதி...




அதுவா கு.க. ஃபாலோ பண்றேன்!


ஙே??


கண்ட கண்ட போஸ்டரெல்லாம் தின்னாதே!
A


'ஜங்கிள் புக்' போடற டைம் ஆச்சே அதான்!




லஞ்சமா கொடுக்கறே!
இதெல்லாம் போலீஸ்கிட்டே
வெச்சுக்கோ...


எத்தனை பேர் கிண்டல் பண்ணியும் புத்தி வரலையே!


உன்னைத்தான் கல்யாணம் பண்ணிப்பேன்னு ஒத்தைக் காலில் நிக்கறான்..!


அம்முக்குட்டி! மாமா உனக்கு சாக்லேட்லாம் வாங்கிட்டு வந்திருக்கேன் பார்த்தியா!


வெல்கம்
வெல்கம்
வெல்கம்
வெல்கம்
வெல்கம்


ஸாரிடா கண்ணா சித்தப்பாவுக்கு பஸ் மிஸ் ஆயிடுச்சு. ஸோ உனக்கு ஒண்ணும் வாங்கி வரலை...


கெட் அவுட்
கெட் அவுட்
கெட் அவுட்
கெட் அவுட்
கெட் அவுட்

ஸ்தாபிதம் : 1986 போன் : 8250770




# ஸ்ரீமதி சிட் பண்ட்ஸ்

வெற்றி நடை போடும்

## ஸ்ரீமதி சீட்டில்

இன்றே சேர்ந்து பயன் பெறுவீர்!

| எங்களது சீட்டு அமைப்புகள் | | | | |
|---|---|---|---|---|
| குரூப் | சீட்டுகாலம் (மாதங்கள்) | மாதாந்திர சந்தா (ரூ) | மொத்த தொகை (ரூ) | அதிகப்படி தள்ளுபடி |
| SV | 50 | 10,000 | 5,00,000 | 30% |
| SL | 50 | 2,000 | 1,00,000 | 30% |
| SJ | 50 | 1,000 | 50,000 | 30% |
| SR | 50 | 600 | 30,000 | 30% |
| SA | 40 | 500 | 20,000 | 30% |
| SB | 40 | 250 | 10,000 | 30% |
| SC | 40 | 125 | 5,000 | 30% |
| SP | 25 | 2,000 | 50,000 | 20% |
| SO | 25 | 4,000 | 1,00,000 | 20% |
| SK | 25 | 1,000 | 25,000 | 20% |
| SI | 30 | 500 | 15,000 | 20% |
| SF | 25 | 400 | 10,000 | 20% |
| SS | 25 | 200 | 5,000 | 20% |

*ஸ்ரீமதி சிட் பண்ட்ஸ் பிரைவேட் லிமிடெட்*




பதிவு அலுவலகம் 34-B, நுங்கம்பாக்கம்
நெடுஞ்சாலை, சென்னை - 600 034.
போன் : 8250770

* நுழைவுக் கட்டணம் தனி

புதிதாகச் சேருபவர்களுக்குப் பரிசு உண்டு.

# பணம் பண்ணலாம் வாங்க!

தொடரை அறிவித்ததுதான் தாமதம்.

நமது ஆபீசுக்கு ஏகப்பட்ட போன் கால்கள்.

''ஏதோ 'டீ குடிக்கலாம் வாங்க' என்கிற மாதிரி தலைப்புக் குடுத்துட்டீங்க. எங்களை மாதிரி மாசச் சம்பளக்காரங்க எப் படிங்க பணம் பண்ண முடியும்?'' என்று ஒருவர்.

''யார் சார் தொடர் எழுதறாங்க? ஹர்ஷத் மேத்தாவா?'' என்று பயங்கர நக்கலாக இன்னொரு வாசகர்.

கோபம் புரிகிறது.

மாதச் சம்பளத்தில் செப்பிடு வித்தை செய்து வரும் நமது மிடில் கிளாஸ் வாசகர்களுக்கு முதற்கண் சலாம்!

அரசாங்கக் கொள்கை ஒரு பக்கமும் கல்ஃப் வார் முதல் பிரேசிலின் காப்பி பயிர் வீழ்ச்சி வரை ரிமோட் கண்ட்ரோலில் இன்னொரு பக்கமுமாக நமது மாதாந்திர பட்ஜெட்டைத் தாறுமாறாக்கினாலும்...

கௌரவம் குறையாமல் வாழ்க்கை நடத்தி வருகிறோம். சாமர்த்தியமாகக் கல்யாணச் செலவு களைச் சமாளித்து வருகிறோம்.

எப்படி...?

சேமிப்பு உணர்வு என்ற பரம்பரைச் சொத்தின் துணையோடுதான். 350 கிராம் கத்திரிக்காயில் குண்டாக மூன்றை எடுத்து 'நாளைக்குக் குழம்புக்கு இருக்கட்டும்' என்று வைத்து விட்டு, மீதியைப் பொறியல் செய்வதில் ஆரம்பிக்கிறது இந்தச் சேமிப்பு உணர்வு.

இந்த உணர்வை அப்படியே விஸ்தரித்து, சம்பளக் கவருக்குக் கொண்டு போவோம்; கொஞ்சம் திட்டமிடலையும் தொலை நோக்கையும் சேர்த்துப்.... பணம் பண்ணலாம் வாங்க!

குழம்புக்கு எடுத்து வைத்த மூன்று கத்திரிக்காயை ஃப்ரிஜ்ஜில் வைக்க வேண்டும். அல்லது பழைய நியூஸ் பேப்பரில் சுற்றி வெயில் படாமல் வைக்க வேண்டும். இல்லாவிட்டால் மறுநாள் அழுகியோ வாடியோ போய் விட, கத்திரிக்காய் காரக் குழம்புக்குப் பதில் கண்டைக்காய் வற்றல் குழம்புதான்!

சம்பளமும் அப்படித்தான். அவசரத்துக்கு இருக்கட்டும் என்று எடுத்து வைப்பதைப் பாதுகாப்பாக வைக்காவிட்டால் போன இடம் தெரியாது!

ஆனால் கத்திரிக்காய் போல் அன்றி குட்டி போடும் தன்மை பணத்துக்கு உண்டு. குட்டி - வட்டி உருவத்தில்.

மிக எளிமையான, சுலபமான சேமிப்பு முறை 'வைப்பு நிதி' என்கிற ஃபிக்ஸட் டெபாஸிட். வங்கி கள் இதற்குப் பத்து சதவிகிதமும் தனியார் நிறுவனங்கள் 14 அல்லது 15 சதவிகிதமும் வட்டி தருகின்றன. (20 முதல் 30 சதம் வரை வட்டி தருகிறோம் என்றும் விளம்பரங்கள் வரு கின்றன... அத்தகைய நிறு வனங்கள் பற்றித் தனியாய்ப் பின்னொரு சமயம் சொல்கிறேன்.)

ஆக, நாம் தேர்ந்தெடுக்கும் வங்கி அல்லது நிறுவனத்தைப் பொறுத்து, ஆயிரம் ருபாய் போட்டு 100 முதல் 300 ருபாய் வரை வட்டி 'சம்பாதிக்கலாம்'.

இந்த வட்டி நமக்கு லாபம் என்று நினைத்துக் கொள்கிறோம். ஆனால், வட்டி விகிதத்தை விட வேகமாகச் செயல்படும் ஒரு விஷயம் நம் லாபத்தை நஷ்டமாக்கி விடுகிறது!

ஓவர் டைமில் உழைத்து வரும் அந்த விஷம் - சாரி - விஷயம்தான் *inflation* என்கிற பணவீக்கம்.

பணவீக்கம் என்பது பண*weak*அம்! காசானது பலவீனமடைந்து, வாங்கும் சக்தியை இழக்கும் நிலை. (விரிவாய்ப் பின்னால் பார்ப்போம்)

உதாரணம் சொல்ல வேண்டுமென்றால் 1960 ஆம் வருஷத்துக்குப் போவோம். அன்று ஒரு 'போர்ன்விடா மிட்டாய்' ஐந்து பைசா என்ற ரேட்டுக்கு வாங்கி நாற்பத்தைந்து மாணவர்கள் அடங்கிய வகுப்பில் விநியோகித்து, பிறந்த நாள் கொண்டாட்டத்தை முடித்துக் கொள்ள முடிந்தது.

இன்றைக்கு, அதே உள்ளடக்கம் கொண்ட ஒரு மிட்டாயை வாங்க குறைந்தபட்சம் ஒரு ருபாய் செலவாகும்!

வி. கோபாலன்

கடந்த 35 வருடங்களில் ருபாயின் மதிப்பு இரு பது முறை குறைந்திருக்கிறது. இன்னமும் குறைந்து

கொண்டேயிருக்கிறது. இந்தியாவில் பணவீக்க விகிதம் சுமார் பன்னிரண்டு சதவிகிதம் என்பது அரசாங்கமே ஒப்புக் கொள்ளும் கணக்கு. அப்படியானால் நிஜமான கணக்குப்படி அது சுமார் பதினைந்து சத விகிதம் இருக்கும்....

ஆக, ஒரு சிறந்த தனியார் நிறுவனத்தில் ஃபிக்ஸட் டெபாஸிட் போட்டு, பதினைந்து சதம் வட்டி சம்பாதித்தால் கூட, அந்தப் பணம் கைக்கு வரும் போது பணவீக்கம் வட்டியை 'கான்ஸல்' செய்து விடும்.

பாங்கில் ஃபிக்ஸட் டெபாஸிட் போட்டாலோ சராசரியாகப் பத்து சதவிகித வட்டிதான் கிடைக்கும். — அதாவது ஆயிரம் ரூபாய்க்கு நூறு ரூபாய் வட்டி. பணவீக்கத்தால் இழப்போ 150 ரூபாய்! நிகர நஷ்டம் ஐம்பது ரூபாய்!

மூன்று தக்காளியில் இரண்டு அழுகிப் போன கதைதான்! (இனி கத்திரிக்காய் உதாரணம் சரிப்பட்டு வராது என்பதால் தக்காளிக்கு மாற வேண்டியுள்ளது!) அதற்காக நாளைக்கும் சேர்த்து இன்றைக்கே சாப்பிட முடியுமா? என்று கேள்வி வரும்.

சாப்பிட முடியாது! ஆனால் தக்காளியை ஊறுகாய் போட்டு வைத்துக் கொள்ளலாம். முறையாகத் தயாரித்தால் மாசக் கணக்கில் கை கொடுக்கும்.

அதே போல், பணத்தையும் வடிவம் மாற்றிப் பண்டமாக - போகப் போக மதிப்பு உயரும் பண்டமாக வைத்துக் கொள்ளலாம்.

அத்தகைய 'பண்டங்கள்' பொன்னும் நிலமும் என்பது இன்றைய யூ.கே.ஜி. வாண்டுக்குக் கூடத் தெரியும்.

ஆனால்.... ஆயிரம் அல்லது இரண்டாயிரத்தை ஃபிக்ஸட் டெபாஸிட் போடுவதற்கும் அதைப் போல் நான்கு மடங்கு செலவழித்துப் பொன் வாங்குவதற்கும் வித்தியாசம் உண்டு. பிளாட் வாங்க வேண்டுமென்றாலோ முதற்கண் கடன் வாங்க வேண்டும்!

நாளைக்குத் தக்காளி ஊறுகாய் சாப்பிடு வதற்காக இன்று மிளகாய், கடுகு, எண்ணெய், பெருங்காயம் பக்கத்து வீட்டில் ஒரு ஸ்பூன் வெந்தயம் என்று வாங்கிச் செலவையும் முயற்சியையும் பெருக்கிக் கொள்வதைப் போல்தான் இதுவும்...

தக்காளியை ஊறுகாயாக்காமல் வைத்திருந்தால் திடீர் விருந்தாளிக்கு ரசம் செய்யலாம்.

பணத்தை பாங்கிலோ கம்பெனியிலோ போட்டால் சட்டென்று அதன் பேரில் கடன் வாங்கி அம்மாவின் திடீர் ஆபரேஷன் செலவைச் சமாளிக்கலாம்.

வீட்டையோ, நிலத்தையோ, நகையையோ காசாக்கு வது அந்த அளவுக்குச் சுலபமில்லை. நமது அவசரம் அறிந்தால், வாங்குபவர் விலை குறைத்துக் கேட்பார். அவற்றின் பேரில் கடன் வாங்கினாலோ வட்டியைச் சமாளிக்க சில்வஸ்டர் ஸ்டாலோனாக மாற வேண்டும்!

எனவே... சேமிப்பதற்கு முன்னால் சேமிப்பின் நோக்கம் என்ன என்பதில் நாம் தெளிவாய் இருப்போம். நாம் இப்போது சேமிப்பது, திடீர் அவசர செலவுக்கா? பத்து வருடங்கள் கழித்து வரப் போகும் மனைவியின் ஐம்பதாவது பிறந்த நாளுக்கா?

இந்த மாதிரி யோசித்துச் செயல்படுவதைத்தான் தொலைநோக்கு என்பார்கள். கொஞ்சம் 'தொல்லை' நோக்குதான். இருந்தாலும் இது முக்கியம்.

(பணம் பெருகும்!)






## ரூ.100 பரிசு பெறும் அனுபவங்கள்.

### முதலிரவுக்கும் முக்காடு!

காதலியுடன் 'பயணங்கள் முடிவதில்லை' படம் பார்க்கக் கிளம்பினேன். அப்போதுதான் ரிலீஸ் ஆகியிருந்த அப்படத்துக்கு ஒரே கூட்டம். பிளாக்கில் டிக்கட் விற்றவர் 'மூன்று டிக்கெட் உள்ளது. மூன்றையும் வாங்கிக் கொள்வதானால் தருகிறேன்...' என்றார். மூன்றையும் எக்கச்சக்க விலைக்கு வாங்கினேன். என்னவளை தியேட்டருக்குள் உட்காரச் சொல்லி அனுப்பிவிட்டு, மூன்றாவது டிக்கட்டை கிடைத்த விலைக்கு விற்றேன். ஏக எதிர்பார்ப்புடன் தியேட்டருக்குள்ளே போய் அவள் அருகில் உட்கார்ந்ததுதான் தாமதம். ''ஐயோ! அப்பா வரார்'' என்றாள். அந்த அப்பா வேறு யாருமில்லை; என் மூன்றாவது டிக்கட்டை வாங்கிய பெரியவர்! படம் முழுவதும் புடைவை தலைப்பால் முக்காடு போட்டுக் கொண்டு நடுங்கியபடி உட்கார்ந்திருந்தாள் அவள். எப்படியோ அன்று தப்பித்துவிட்டோம்.

முதலிரவு அன்று "எதுக்கும் முக்காடு போட்டுக்கோ; உங்கப்பா வந்தாலும் வருவார்" என்று அவளிடம் நான் சொல்ல, அவள் சிரித்த சிரிப்புக்கு இன்றுவரை நான் அடிமை!

சிவகங்கை, கே.ஜே.எல். முத்துராமன்.

### சிரிப்பும் அழுகையும்

பக்கத்துப் போர்ஷனிலிருந்த வீட்டுச் சொந்தக்காரர் மகளுக்கும் எனக்கும் காதல். எங்கள் இருவரது வீடுகளைப் பிரித்த சுவரில், தரையை ஒட்டி, தண்ணீர் ஓடுவதற்கு ஒரு சிறு துவாரம் இருந்தது. இதுவே நாங்கள் லவ் லெட்டர் பரிமாறிக் கொள்ளும் போஸ்ட் பாக்ஸ்! அந்த 'போஸ்ட் பாக்ஸ்' அருகேதான் இரவில் நாங்கள் படுப்போம். ஓர் இரவு என் அப்பாவுக்கு ஜுரம். அவதியில் என் இடத்தில் படுத்துவிட்டார். அவரை எழுப்ப முடியாமல் தவித்து விட்டு நானும் கண்ணயர்ந்து விட்டேன். சற்றைக்கெல்லாம் பெரும் கூச்சலுடன் எழுந்தார் அப்பா. என் காதலி 'போஸ்ட் பாக்ஸில்' கடிதத்தை வைத்துக் குச்சியால் தள்ள, குச்சி அவர் காதைக் குத்தி விட்டிருந்தது! கலாட்டாவில் கடிதத்தை யாரும் கவனிக்காததால் அதை 'நைஸாக' எடுத்து வைத்துக் கொண்டேன். சம்பவம் சிரிப்பூட்டினாலும் அப்பாவை ஈ.என்.டி. டாக்டரிடம் காட்டிய வகையில் ஆன இமர் செலவு, ஐம்பது ரூபாய் அழ வைத்தது!

சென்னை-19, கே.வி.பி. ஸ்ரீதரன்

### கடற்கரையில் நிலவொளியில்...

காதலியுடன் கன்னியாகுமரிக்கு வந்திருந்தேன். கடற்கரையில் நிலவொளியில் எங்களை மறந்து பேசிக் கொண்டேயிருந்தோம். திடீரென்று வாட்சைப் பார்த்தால், மணி பத்து! இருவரும் நாகர்கோவில் திரும்ப வேண்டும். "நேரமாகி விட்டதே! பஸ்கிஸ் கிடைக்குமோ கிடைக்காதோ!'' என்று கவலைப்பட்ட போது சற்றும் எதிர்பாராதது நடந்தது. "முதலில் சொன்னது (பஸ்) கிடைக்காது; ஆனால் இரண்டாவதாய்ச் சொன்னது கிடைக்கும்" என்று முகம் மலரச் சொல்லி விட்டு என் கன்னத்தில் முத்தமிட்டாள். அந்த இனிய மாலைப் பொழுதை, அந்த முதல் முத்தத்தை-இன்று- மூன்று குழந்தைகள் பெற்ற பிறகும் சிலிர்ப்புடன் நினைத்துக் கொள்கிறேன்.

நாகர்கோவில், க. இராமநாதன்.

### தியாகத்தின் எல்லை!

என் நண்பன் டேவிட். அவன் காதலி

அப்போது பொன்னன், "இல்லை மகாராஜா இல்லை. மகாராணி எங்கேயோ உயிரோடுதான் இருக்கிறார். ஆனால், எங்கே என்றுதான் தெரியவில்லை...." என்றான்.

விக்கிரமனுக்குக் கொஞ்சம் உயிர் வந்தது!

"அதெப்படி பொன்னா! உன்னிடந்தானே நான் மகாராணியை ஒப்புவித்து விட்டுப் போனேன்? நீ எப்படி அஜாக்கிரதையாயிருந்தாய்....?"

"மகாராஜா! எல்லாம் விவரமாய்ச் சொல்ல வேண்டும். மறுபடியும் மழை வலுக்கும் போலிருக்கிறது. தாங்கள் ஏற்கெனவே நனைந்திருக்கிறீர்கள். குளிர் காற்றும் அடிக்கிறது! அதோ அந்த மண்டபத்துக்குப் போகலாம் வாருங்கள். எவ்வளவோ சொல்ல வேண்டும்; எவ்வளவோ கேட்க வேண்டும். இரவும் நெருங்கிவிட்டது."

இருவரும் எழுந்திருந்து மண்டபத்தை நோக்கிப் போனார்கள்.

## 12. சூரிய கிரஹணம்

**வி**க்கிரமனும் பொன்னனும் மண்டபத்தை அடைந்த போது நன்றாக இருட்டி விட்டது. இம்மாதிரி ஜன சஞ்சாரமில்லாத இடங்களில் வழிப் போக்கர்கள் தங்குவதற்காக அத்தகைய மண்டபங்களை அந்நாளில் கட்டியிருந்தார்கள். மகேந்திர சக்கரவர்த்தியின் காலத்தில் அவருடைய கட்டளையினால் கட்டப்பட்டபடியால் அவற்றுக்கு மகேந்திர மண்டபங்கள் என்ற பெயர் வழங்கி வந்தது.

மண்டபத்துக்கு வெளிப்புறம் இருந்த திண்ணையில் விக்கிரமனை இருக்கச் செய்து, பொன்னன் உள்ளே சென்று தான் அங்கு வைத்திருந்த உலர்ந்த துணிகளை எடுத்து வந்தான். விக்கிரமன் அவற்றை உடுத்திக் கொண்டான். அந்த மழைக்கால இருட்டில் இனி வழி நடப்பது அசாத்தியமாதலால், அன்றிரவை அந்த மண்டபத்திலேயே கழிப்பது என்று இருவரும் சேர்ந்து தீர்மானித்தார்கள்.

பிறகு, பொன்னன் அருள்மொழி ராணியைப் பற்றிய பின்வரும் அதிசயமான வரலாற்றைக் கூறினான்:-

**வி**க்கிரமன் தேசப் பிரஷ்ட தண்டனைக்கு உள்ளாகிக் கப்பல் ஏறிச் சென்ற பிறகு, அருள்மொழி ராணிக்கு உயிர் வாழ்க்கை பெரும் பாரமாயிருந்தது. மீண்டும் தன் புதல்வனை ஒருமுறை காணலாம் என்ற ஆசையினாலும் நம்பிக்கையினாலுமே




உயிரைச் சுமந்து கொண்டிருந்தாள். ஆனாலும், முன்னர் கணவனுடனும் பிறகு புதல்வனுடனும் வசித்திருந்த வசந்த மாளிகையில் தன்னந்தனியாக வசிப்பது அவளுக்கு நரக வேதனையாயிருந்தது. இச்சமயத்தில்தான், பார்த்திப மகாராஜாவின் தோழரும் பழைய பல்லவ சேனாதிபதியுமான பரஞ்சோதி அடிகள் தமது தர்மபத்தினியுடன் தீர்த்த யாத்திரை செய்து கொண்டு உறையூருக்கு வந்தார். அவர்கள் வசந்த மாளிகைக்கு வந்து அருள்மொழி ராணியைப் பார்த்துத் தேறுதல் கூறினார்கள். அருள்மொழி, அவர்களுடன் தானும் ஸ்தல யாத்திரை வருவதாகச் சொல்லவே, அவளையும் அழைத்துக் கொண்டு பிரயாணம் கிளம்பினார்கள்.

காஞ்சி நகர் ஒன்று நீங்கலாகத் தமிழகத்திலுள்ள மற்ற புண்ணிய ஸ்தலங்களுக்கெல்லாம் அவர்கள் சென்றார்கள். இரண்டு வருஷகாலம் இவ்விதம் யாத்திரை செய்த பிறகு சென்ற வருஷம் தைமாதத்து அமாவாசையில் காவேரி சங்கமத்தில் ஸ்நானம் செய்யும் பொருட்டு அவர்கள் பரஞ்சோதி அடிகளின் சொந்த ஊராகிய திருச்செங்காட்டாங்குடிக்கு வந்து சேர்ந்தார்கள்.

சென்ற வருஷம் தை அமாவாசையில் மகோதய புண்ணிய காலம் சேர்ந்தது. அதனுடன் அன்று சூரிய கிரகணம் - சம்பூர்ண கிரகணம் - பிடிப்பதாயுமிருந்தது. இந்த விசேஷ புண்ணிய தினத்தை முன்னிட்டு அன்று காவேரி சங்கமத்தில் சமுத்திர ஸ்நானம் செய்வதற்காக நாடெங்கும் இருந்து ஜனங்கள் திரள் திரளாக வந்தார்கள். பொன்னனும் வள்ளியுங்கூட உறையூரிலிருந்து நெடுநாள் பிரயாணம் செய்து காவேரி சங்கமத்துக்கு வந்து சேர்ந்தனர். உறையூர் வாழ்க்கை அவர்களுக்கும் பிடிக்காமற் போயிருந்தபடியாலும், அருள்மொழி ராணியை ஒரு வேளை சந்திக்கலாம் என்ற ஆசையினாலுந்தான் அவர்கள் வந்தார்கள்.

அவர்களுடைய ஆசையும் நிறைவேறியது. திருச்செங்காட்டாங்குடியிலேயே அருள் மொழித் தேவியை அவர்கள் சந்தித்துக் கொண்டார்கள்.

புண்ணிய தினத்தன்று காலையில் பரஞ்சோதி அடிகள், அவர்களுடைய பத்தினி திருவெண்காட்டு நங்கை, அருள்மொழி ராணி, பொன்னன், வள்ளி எல்லாருமாக காவேரி சங்கமத்துக்குக் கிளம்பினார்கள். சங்கமத்தில் அன்று கற்பனைக்கடங்காத ஜனத்திரள் கூடியிருந்தது. உலகத்திலுள்ள மக்கள் எல்லாம் திரண்டு வந்துவிட்டார்களோ என்று தோன்றிற்று. ஜனசமுத்திரத்தைக் கண்ட உற்சாகத்தினால் ஜல சமுத்திரமும் பொங்கிக் கொந்தளித்துக் கொண்டிருந்தது.

சமுத்திரம் பொங்கிக் காவிரிப்பூம்பட்டினத்தைக் கொள்ளை கொண்ட காலத்துக்குப் பிறகு, காவேரி நதியானது மணலைக் கொண்டுவந்து தள்ளித் தள்ளிச் சமுத்திரத்தை அங்கே வெகு தூரத்துக்கு ஆழமில்லாமல் செய்திருந்தது. இதனால் சமுத்திரத்தில் வெகு தூரம் விஸ்தாரமாக ஜனங்கள் பரவி நின்று ஸ்நானம் செய்து கொண்டிருந்தார்கள். அலைகள் வரும்போது ஜலத்தில் முழுகியும், அலைகள் தாண்டியவுடன் மேலே கிளம்பியும், இவ்வாறு அநேகர் சமுத்திர ஸ்நானத்தின் குதூகலத்தை அநுபவித்துக் கொண்டே புண்ணியமும் சம்பாதித்துக் கொண்டிருந்தார்கள்.

இப்படிப்பட்ட ஜனக் கூட்டத்தின் மத்தியில் பரஞ்சோதி அடிகள், அருள்மொழி ராணி ஆகியவர்களும் ஸ்நானம் செய்வதற்காகச் சமுத்திரத்தில் இறங்கிச் சென்றார்கள்.

இப்போது சூரிய கிரகணம் பிடிக்க ஆரம்பித்து விட்டது. அதிக வேகமாகச் சூரியனுடைய ஒளி குறைந்து கொண்டு வந்தது. கிரகணம் முற்ற முற்ற வெளிச்சம் குன்றி வந்ததுடன், சமுத்திரத்தின் கொந்தளிப்பும் கோஷமும் அதிகமாகி வந்தன.

பட்டப் பகலில், மேகமில்லாத துல்லிய ஆகாயத்தில், திடீரென்று சூரிய ஒளி குன்றி இருள் சூழ்ந்து வந்த காட்சியினால் சகலமான ஜனங்களுக்கும் மனத்தில் இன்னதென்று சொல்ல முடியாத ஒருவித அச்சம் உண்டாயிற்று. அப்போது இயற்கையிலேயே தெய்வ பக்தியுள்ளவர்கள் அண்ட சராசரங்களையெல்லாம் படைத்துக் காத்து அழிக்கும் இறைவனுடைய லீலா விபூதிகளை யெண்ணிப் பரவசம் அடைந்தார்கள். பரஞ்சோதி அடிகள் அத்தகைய நிலையைத்தான் அடைந்திருந்தார். ராணி அருள்மொழித் தேவியும் கண்களை மூடிக்கொண்டு கிழக்குத் திசையை நோக்கித் தியானத்தில் ஆழ்ந்திருந்தாள்.

வள்ளி சமுத்திரத்தையே அன்று வரையில் பார்த்தவள் இல்லை. ஆகையால் அவள் நெஞ்சு திக்திக்கென்று அடித்துக் கொண்டிருந்தது. அவளை அலை அடித்துக் கொண்டு போகா வண்ணம் பொன்னன் அவளுடைய கையைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டிருந்தான். வள்ளி பொன்னனிடம், "எனக்குப் பயமாயிருக்கிறதே! கரைக்குப் போகலாமே!" என்றாள். "இவ்வளவு தானா உன் தைரியம்?" என்று பொன்னன் அவளிடம் சொல்லிக் கொண்டிருக்கும் போது, திடீரென்று அந்த அதிசயமான துயரச் சம்பவம் - யாரும் எதிர்பாராத காரியம் - நடந்து விட்டது.

ராணி அருள்மொழி மூடியிருந்த கண்களைத் திறந்தாள். "குழந்தாய், விக்கிரமா! இதோ வந்து விட்டேன்!" என்று கூவினாள். ராணியின் அந்த அலறும் குரல் ஒலி, அலைகளின் பேரிரைச்சலையெல்லாம் அடக்கிக் கொண்டு மேலெழுந்து பொன்னன், வள்ளி இவர்கள் செவியில் விழுந்தது. இந்த அலறல் ஒலி கேட்டது ஒரு கணம்; மறுகணத்தில் அருள்மொழி ராணி கிழக்கு நோக்கிக் கடலிலே பாய்ந்தாள். ஒரு பேரலை வந்து மோதி அவளை மூழ்கடித்தது.

பொன்னனும், வள்ளியும் 'ஓ'வென்று கதறினார்கள். தியானத்திலிருந்து கண் விழித்த பரஞ்சோதி அடிகள், "என்ன? என்ன?" என்றார். பொன்னன், "ஐயோ! மகாராணி அலையில் போய்விட்டாரே!" என்று அலறினான். உடனே, பரஞ்சோதி அடிகள் தமது பத்தினியையும் வள்ளியையும் நோக்கி, "நீங்கள் உடனே கரை ஏறி விடுங்கள்!" என்றார்.

அச்சமயத்தில் சூரிய கிரகணம் சம்பூரணம் ஆயிற்று. வானத்தில் நட்சத்திரங்கள் தெரிந்தன.

இருட்டினால் கலவரமடைந்த ஜனங்களின் மத்தியில் "அப்பா!" "அம்மா!" "மகனே!" என்ற கூக்குரல்கள் கிளம்பின. பக்தர்களுடைய பரவசக் குரலில், "ஹர ஹர" "சம்போ" என்னும் கோஷங்களும் எழுந்தன.

அந்தக் கிரகண அந்தகாரத்தில் கடல் அலைகளுடன் போராடிக் கொண்டு பரஞ்சோதி அடிகளும் பொன்னனும் அருள்மொழி ராணியைத் தேடத் தொடங்கினார்கள்.

(தொடரும்)

# சலவைக்கு சலவை!
# சலுகைக்கு சலுகை!

# இலவசம்!

ரூ. 1.25 மதிப்புள்ள ஒரு கேஸ்பர் கொசுக்களை விரட்டும் மேட் ஒவ்வொரு 300 கிராம் டோட்டல் பாருடன் அல்லது 250 கிராம் டோட்டல் கட்டியுடன்




ரூ. 2.50 மதிப்புள்ள இரண்டு கேஸ்பர் கொசுக்களை விரட்டும் மேட்கள் ஒவ்வொரு 500 கிராம் டோட்டல் பாருடன்




**டோட்டல்**
நீல டிட்டர்ஜெண்ட் பார்

MSIL A product of
Mysore Sales International Limited
Bangalore-560 052.

மதுமிதா

அக்காவின் குரல் பெரிதாகக் கேட்டது. ஆச்சர்யமாக இருந்தது. அக்கா அதிர்ந்து பேச மாட்டாள். குரல் உயர்த்தினாள் எனில் ஏதோ முக்கிய விஷயமாகத் தானிருக்கும்.

அவசரமாய் ஸ்டிக்கர் பொட்டு பிரித்து தமயந்தி நெற்றிக்கு இட்டாள். ஒற்றை நொடி கண்ணாடியில் பிம்பம் பார்த்து வெளியே வந்தாள்.

இப்போது அக்கா பேச்சு தொலைத்து அழுது கொண்டிருந்தாள். ஊஞ்சல் கம்பியை பிடித்துக் கொண்டு அம்மா மௌனமாக. எதிரே அப்பா ஒருவித குற்ற உணர்ச்சியுடன். தமயந்தி பதறினாள். அக்கா தோளைத் தொட்டாள்.

"என்னம்மா... ஏன் அக்கா அழுறா...?"

அக்கா நிமிர்ந்தாள். இவளைப் பார்த்ததும் அழுகை பெரிதானது.

"என்ன சந்து... என்னம்மா...?"

அவள் கண்ணீர் துடைத்தாள். கைகொடுத்து தூக்கினாள். தோளை அணைத்து உள்பக்கம் அழைத்துப் போனாள்.

அம்மா நகர முயற்சித்தாள். அப்பா கைநீட்டி தடுக்க, நின்றாள். அக்காவை உட்கார வைத்தாள்.

"என்னக்கா... சின்னக் குழந்தை மாதிரி அழறே...?"

அக்கா பார்வை தாழ்த்தினாள். முகவாய் தொட்டு நிமிர்த்தினாள். கண்மீன்கள் மறைந்தன.

"சொல்லுப்பா... அம்மா என்ன சொன்னா...?"

இவள் கைகளை இறுகப் பற்றிக் கொண்டாள்.

"நான் என்னடி பண்ணுவேன்...? வர்ற மாப்பிள்ளை எல்லாம் என்னை வேண்டான்னு சொல்லிட்டு போறான்னு அம்மா என்கிட்ட கத்துறா...!"

பேச முடியாமல் தவித்தாள்.

கடவுளே!

அம்மாவா?

ஆறுதல் சொல்ல வேண்டியவள் காயப்படுத்துகிறாள்.

"ஹேய்... இதானா... சியர் அப் மேன்... அவங்க கிடக்கிறானுங்க முட்டாப் பசங்க...!"

இவள் பேச்சு பார்த்து அக்கா புன்னகைத்தாள்.

"ராஜகுமாரன் வருவான்... என் அக்காவை குதிரைல ஏத்திட்டுப் போவான் தெரியுமா...?"

அக்கா விழி துடைத்தாள்.

"இல்லே தமயந்தி... நான் உனக்கு தடையா நிக்க விரும்பலை... முதல்ல உனக்கு பண்ணச் சொன்னேன்... அதான் அம்மா கத்தறா...!"

தமயந்தி பெரிதாகத் தலையசைத்தாள்.

"நோ... நோ... உன் பையனை கொஞ்சி ஸ்கூல்லே கொண்டு விட்டுட்டுதான் எனக்கு கல்யாணம்... தத்து பித்துன்னு உளறாதே... வா... சாப்பிடலாம்...!"

அம்மா மௌனமாய் டிபன் பரிமாறினாள். நடுநடுவே தமயந்தி ஜோக் அடித்தாள். முதலில் அம்மா மசியவில்லை. பின்பு அம்மா தணிந்தாள். இளகினாள்.

"கோச்சுக்காதடி... செல்லம்... என்ன பண்றது... வயசாய்டுச்சல்ல...!"

அக்காவின் தலையைக் கோதினாள்.

அக்கா அம்மாவின் இடுப்பில் முகம் புதைத்தாள்.

யாரோ தோளைத் தொட்டார்கள். ஸ்வர்ணா.

"தமு... உன் அப்பா வந்துருக்கார்...!"

அதிர்ந்தாள்.

அப்பா அலுவலகம் வர மாட்டார். எனில் எதுவும் அவசரம்? ஃபைலை மூடி விட்டு எழுந்தாள்.

"என்னப்பா... என்ன...?"

"பதறாதம்மா... நல்ல விஷயம்தான்!"

இவள் பதற்றம் பார்த்து அப்பா சிரித்தார்.

"தரகர் வந்தார்... திடீர்னு ஒரு வரன் வந்துருக்கு... அக்காவை உடனே பாக்கணும்னு சொல்றாங்க...!"



"பையன் என்ன பண்றார்...?"

"சிவில் இன்ஜினியர்... சிங்கப்பூர்ல ஒரு பெரிய கன்ஸ்ட்ரக்ஷன் கம்பெனில வேலை பாக்குறார். ஒரு மாசம் லீவுல வந்துருக்கார்... உடனே பாக்கணும்னு சொல்றாங்க...!"

"சிங்கப்பூரா...!"

"அழச்சிட்டுப் போய்டுவாராம்... அஞ்சு வருஷத்துல காசு சேத்துட்டு இங்க வந்து தொழில் செய்யற ஐடியால இருக்காராம்... நல்ல பையன்தான்...!"

அப்பாவுக்குப் பிடித்துப் போய் விட்டது.

"அரை நாள் லீவு சொல்லிட்டு வாம்மா...!"

தலையசைத்தாள்.

வந்து விட்டார்கள்.

பையனின் கண்கள் அலைபாய்ந்தன.

பையனின் தாய், தந்தை, சகோதரன் வந்திருந் தார்கள்.

அப்பா பேசுவது கேட்டது.

"இவருதான் பையன்... பெரியவர்... அது அவர் தம்பி... பி.ஏ. முடிச்சுட்டு கம்பெனில இருக்கார்!"

அப்பா உள்ளே வந்தார்.

"தமு... அக்காவை அழைச்சிட்டு வா...!"

அக்கா மெலிதாக





# 70 JJ

அவசரக் குளியல், அரைகுறை உணவு,
அதிரடியாகப் புறப்பாடு
மதிய டிபனை மறதியில் விட்டு
மண்டை தெறிக்க நடைபோட்டு,
பல்லவ நரகப் படிகளில் தொற்றி,
பல பொன் மொழிகள் தினம் கேட்டு
தடவித் திணறி, முன்னே வருவது
தினமும் உன்னைத் தேடித்தான்!
ஜன்னல் ஓரத் தேவதையே என்
சேதி உனக்குக் கிடைக்கிறதா?
பின்னல் போட்டும் பறக்கிற கூந்தல்
பார்வைப் பாதையைத் தடுக்கிறதா?

வெளியே என்ன இருக்கிறது?
வெற்றுப் பார்வை பார்க்கின்றாய்
விரையும் மரங்கள், கார்கள், ஸ்கூட்டர்
வீணே அலறும் லாரியினம்
பழியே கிடக்கும் பாமரனுக்கொரு
பார்வைப் பிச்சை கூடாதா?
அடியே உனக்கென்ன ஈயக்காதா
அடிமன ஓலம் கேட்கலையா?

தினமொரு கனவு, தினமொரு கவிதை
தினமொரு தருணம் உனைத்தேடி
தினமொரு பார்வை, தினமொரு ஏக்கம்
தினமொரு தோட்டம் உனக்காக
மனமென ஒன்று உனக்கிருந்தால்
மறுபடி வருவேன் மறக்காதே!
இனியென வேண்டும், வெறும் பார்வை
இதை மட்டும் தர மறுக்காதே!

— குரோம்பேட்டை கவிராயர்

அலங்காரம் பண்ணியிருந்தாள்.

அக்காவை அழைத்துக் கொண்டு போனாள்.

அக்கா தலைகுனிந்து உட்கார்ந்திருந்தாள்.

தமயந்தி எல்லோரையும் ஒரு பார்வை பார்த்தாள்.

மாப்பிள்ளை பையனின் பார்வை ஒருமுறை இவள் மேல் மோதியது.

அக்காவை அழைத்துப் போகச் சொன்னார்கள்.

உள்ளே போனார்கள்.

தமயந்தி வெளியே வந்து நின்றாள்.

அவர்கள் ரகசியமாக ஏதோ பேசிக் கொண்டார்கள்.

அப்பா கை பிசைந்து விலகி நின்றார்.

தரகர் தயக்கமாய் அப்பாவிடம் வந்தார்.

"சித்த உள்ற வாங்க...!"

போனார்கள்.

"என்ன சார்?"

அப்பா கேட்டார்.

"அவங்களுக்கு உங்க சம்பந்தம் பிடிச்சிருக்கு... ஆனா... உங்க சின்னப் பொண்ணைக் கொடுப்பீங்களான்னு கேக்கறாங்க...!"

அப்பா அதிர்ந்தார்.

"ஏன்...?"

"சின்னப் பொண்ணு நல்ல அழகு... நல்ல படிப்பு...!"

அக்காவின் கண்களில் நீர் துளிர்த்தது.

தமயந்தி தடக்கென வெளியே வந்தாள்.

இவள் வேகம் பார்த்தவர்கள் புருவம் சுளித்தார்கள்.

"தரகர் எல்லாம் சொன்னார்... உங்க மருமகளா வர்றதுக்கு எனக்கு இஷ்டம் தான்... சின்ன மாறுதல்... பெரிய மருமகளா அல்ல... சின்ன மருமகளா... என்ன சம்மதமா...?"

மாப்பிள்ளை பையன் சட்டென எழுந்தான்.

அவன் முகம் கறுத்திருந்தது.

எல்லோரும் கிளம்பி விட்டார்கள்.

"ஏம்மா... இப்படிப் பேசினே...?"

அப்பா தளர்வாய்க் கேட்டார்.

"உங்க பாஷைல பேசினா அவங்களுக்குப் புரியாதுப்பா... அதான் அவங்க பாஷைல பேசினேன்... சட்டுனு புரிஞ்சுக்கிட்டாங்க...!"

அக்கா இவளைப் பார்த்து சின்னதாய் சிரித்தாள்.

# சினேகம் ஃபைனான்ஸ் & இன்வெஸ்ட்மெண்ட்ஸ்
## (சினேகம் குரூப் ஆஃப் கம்பெனிகள்)




குறைந்தபட்ச முதலீடு

ரூ.5000/- அதற்கு மேலும்

காலம் 1 ஆண்டு அதற்கு மேலும்

**+ 3% ஊக்கத்தொகை**

- பென்சன்தாரர்களுக்கு
- வயது முதிர்ந்தோருக்கு
- தர்ம ஸ்தாபனங்களுக்கு கூடுதலாக 1% ஊக்கத் தொகை

**விரைவில் எங்கள் கிளைகள்**

கோவை, மதுரை, திருச்சி நகரங்களில் திறக்கப்படுகிறது

## சிறப்பு அம்சங்கள்

- வட்டிக்கும், டெபாசிட் தொகைக்கும் பின் தேதியிட்ட காசோலைகள் வழங்கப்படும்

**சினேகம் (முதலீடு இரட்டிப்புத் திட்டம்)**

| உங்கள் முதலீடு | 36 வது மாத முடிவில் |
|---|---|
| ரூ.10,000 | ரூ.20,000 |

- சினேகம் மழலைத் திட்டம்
- சினேகம் அறிவொளித்திட்டம்
- சினேகம் திருமணத் திட்டம்
- சினேகம் முதியோர் திட்டம்

விவரங்களுக்குத் தொடர்பு கொள்ளவும்
தலைமை & நிர்வாக அலுவலகம்

**சினேகம் ஃபைனான்ஸ் & இன்வெஸ்ட்மெண்ட்ஸ்**

31, முதல் அவின்யூ, அசோக் நகர், சென்னை - 600 083.
போன் 4825105 / 4825566



கிளை அலுவலகங்கள்

*Right place for the Right people*

71-G, சூரமங்கலம் மெயின் ரோடு,
(தியாகராஜர் பாலிடெக்னிக் அருகில்) சேலம் - 636 005 போன் : 446961
161, மிஷன் தெரு, பாண்டிச்சேரி

| பாதுகாப்பு! | நம்பிக்கை! | துரித சேவை! |
|---|---|---|

தொழில் வல்லுநர்களால் நடத்தப்படும் நிறுவனம்

# என்னுயிரும் நீயல்லவோ

1



ஒரு பெரிய மேகம் சமையலறைக் கதவு வழியாக நுழைந்து, ஹாலுக்குள் திரும்பி, படுக்கையறை ஜன்னல் வழியாக வெளியே போயிற்று.

காட்டுக்குப் போன புருஷன் வேலை முடித்து களைத்து வருவது போல் ரொம்ப நிதானமாய் அவளைத் தாண்டிப் போயிற்று. மேகம் நுழைகிற போது ஒரு ஜில்லிப்பும் நுழையும். மேகம் நகர்ந்து போன மறு வினாடியில் குளிர் குறைந்து வெயில் தாக்கும். மலைப்பிரதேசத்தில் பகல் நேரப் பதினோரு மணி சுவாரஸ்யமான காலம். சடேரென்று இருளும், சுளீரென்று வெயிலடிக்கும். மேகம் சூழ்ந்த போது குளிரும். நகர்ந்து வெகு தூரம் போனால் வியர்க்கும். இப்படி உஷ்ணமும் குளிரும் வெளிச்சமும் இருட்டுமாய் இருப்பது பூச்சிகளுக்கு சுகமான விஷயம். மனிதனும் ஒரு பூச்சிதான். ஆரம்பத்தில் இந்த சீதோஷ்ணம் கொஞ்சம் சிரமம் ஏற்படுத்தும். எரிச்சல் ஏற்படுத்தும். மலை பழகி விட்டால் தரைக்குப் போக முடியாது. தரையின் வெக்கையைத் தாங்கவே முடியாது. வியர்த்து ஊற்றுவதைப் பொறுத்துக் கொள்ளவே முடியாது.

மலையில் வியர்த்து ஊற்றாது. எவ்வளவு நடந்தாலும் வியர்க்காது. வெடவெடவென்று குளிராது. ஆனால் காற்றிலுள்ள ஈரம் மூக்கு நுனியை, கன்னத்து மேட்டை நக்கிக் கொண்டிருக்கும். நாகர்கோவில் பக்கமிருந்து பதினெட்டு வயதில் போடிநாயக்கனூர் மலைக்கு வந்தாகி விட்டது.

"பகவதி உனக்கு இந்த இடம் பிடிச்சிருக்கா" என்று நாச்சியப்ப செட்டியார் கேட்ட போது வியப்பில் ஆழ்ந்த மனசு தலையை மட்டும் ஆட்டியது. நாகர்கோவில் கிராமத்திலேயே உறவுகளுக்கு முன்னால் இருபது பவுன் நகை போட்டார்.

பாலகுமாரன்

"இதை நீ போட்டுட்டு வந்தாலும் சரி, அவுத்து உங்கம்மாகிட்டே கொடுத்துட்டு வந்தாலும் சரி. உன் இஷ்டம். நீ சந்தோஷமா வந்தா போதும்."

நாச்சியப்பன் மிருதுவாகப் பேசினார். அவள் நீண்ட நேரம் யோசித்து நகைகளோடு வருவதாகச் சொல்லி விட்டாள்.

நாகர்கோவிலில் அந்த நகையைப் பல பெண்கள் தொட்டுத் தொட்டுப் பார்த்தார்கள். இந்த மலையில் அந்த நகைகளைப் பார்க்க ஆளே இல்லை.

"கழுத்துல ஒரு செயின் கூட இல்லா திருக்கீங்களே ஏன்?" - பகவதி பக்கத்து வீட்டுக்காரியிடம் கேட்டாள்.

"செயினைப் போட்டு யார்கிட்ட காட்ட? வீட்டு வாசல்ல உட்கார்ந்தா போறவங்க வர்றவங்க இருக்கணும்; செயின் போடணும். அடுத்த வீடே ஒரு கிலோ மீட்டர் தூரம். இங்க நகை எதுக்கு. நகை வாங்கற காசுல நிலம் வாங்கலாம். உரம் வாங்கலாம். பூச்சி மருந்தோ, நல்ல நாத்தோ



வாங்கலாம். ஆயிரம் அடி பைப்பும், நாற்பது ஐம்பது ஸ்பிரிங்ளரும் வாங்கினா வாடகைக்கு விட்டே அசலை அடைச்சுடலாம். நாச்சி யப்ப செட்டியாரை ஸ்ப்ரிங்ளர் வாங்கச் சொல்லு."

"ஸ்ப்ரிங்ளர்ன்னா என்னா?"

"அதோ பார் அதுதான்."

பக்கத்து வீட்டுக்காரி சற்று தள்ளிப் போய் ஒரு மலைச் சரிவில் கைகாட்டினாள். அந்த மலைச்சரிவில் இருபது இருபத்தைந்து இடங்களில் நீர் பூப்போல் வீசி வீசித் தெளிக்கப்பட்டுக் கொண்டிருந்தது. இருபதடி வீச்சுக்கு நாலாபுறமும் தண்ணீரை வீசிக் கொண்டிருந்தது. வெற்றிலைச் சாறை விரல் வைத்து வேகமாய் உமிழ்வது போலத் தோன்றியது.

"ஸ்ப்ரிங்ளர் பார்க்கணுமா? வா."

நாச்சியப்பன் கூட்டிக் கொண்டு போனார். மலையேறி அவளுக்குப் பழக்கமிருந்தது. தழைகளுக்கு நடுவே குனிந்து நடக்கத் தெரிந்தது. ஒரு ஸ்ப்ரிங்ளர் அவளைத் தாண்டி தண்ணீர் உமிழ்ந்தது. நாச்சியப்பன் சட்டென்று உட்கார்ந்து கொண்டார். அடுத்த வீச்சில் ஸ்ப்ரிங்ளர் பனிச்சென்று

முன்னே நீர் துப்பியது. முட்டி முத்தம் கொடுத்தது போன்ற ஒரு திகைப்பில், ஈரச் சிலிர்ப்பில் பகவதி திளைத்து நின்றாள். நெஞ்சுப் புடைவை முழுவதும் நனைந்து போயிற்று. நாச்சியப்பன் வாய் விட்டுச் சிரித்தார்.

"ஒன்னு எட்டத் துப்பினா ஒன்னு கிட்டத் துப்பும். ரெண்டடிலேர்ந்து இருபது அடி வரைக்கும் தண்ணி தெளிக்கும். ஒரு ஸ்ப்ரிங்ளர் இருபதடி ஆழும். மொத்தம் இருபத்தி ஏழு ஸ்ப்ரிங்ளர். எத்தினி ஏக்கருக்கு நீர் பாயும்?"

"ஐயோ எனக்குத் தெரியாதே."

"அப்போ விட்டுடு. உனக்கு என்ன தெரியுமோ அதைச் செய்."

"நான் நல்லா சமைச்சுப் போடுவேன்."

"அத மட்டும் வண்ணமா செய்துட்டா இந்த நாச்சியப்பன் உன்னை எங்கோ கொண்டு போய் உட்கார வச்சுடுவான். எத்தினி சவரன் நகை வேணாலும் போடுவான். உனக்கு என்ன மாதிரி நகை வேணும்?"

"நகை வேணாம்."

"உன் பேர்ல தோட்டம் வாங்கட்டுமா?"

"உங்களுக்கே நிறைய தோட்டம் இருக்கே, எனக்கு எதுக்கு?"

நாச்சியப்பன் புது மனைவியை உற்சாகப் படுத்தினார்.

"என் தம்பி என்ஜினியரிங் படிக்கணுங்கறான். எங்கப்பாவால முடியாது."

"இப்ப என்ன படிக்கறான்?"

"எஸ்.எஸ்.எல்.சி."

"என்ஜினியரிங்தானே, படிக்க வச்சுடுவோம். இன்னிக்கு மத்தியானம் என்ன சமைக்கப் போற..."

அவள் நீர்த் தெளிப்பானை மறந்து விட்டு, தம்பியை நினைத்துக் கொண்டு வீட்டுக்கு ஓடினாள். இருந்தவைகளை வைத்து அருமையாய் சமைத்து இறக்கினாள்.

அதே சமையலறை. அதே அடுப்பு. இருபது வருடமாகி விட்டது. எதற்கு தம்பியை என்ஜினியராக்கினோம் என்று தெரியவில்லை. என்ஜினியராகி, டெலிபோன் டிபார்ட்மெண்ட்டில் சேர்ந்து கோவாவுக்குப் போய் விட்டான். திருவனந்தபுரத்துப் பெண்ணை கொல்லத்தில் கல்யாணம் செய்து கொண்டான். வேலைக்குப் போனது பற்றியும் அவன் தெரிவிக்கவில்லை. திருமணம் முடிந்தது பற்றியும் சொல்லவில்லை.

"படிப்பு முடிஞ்ச பிறகு அவனுக்கு உன்னைப் பிடிக்காமப் போயிடுச்சுடி."

"ஏன் அப்பா?"

"நீ நாச்சியப்ப செட்டியாருக்கு வைப்பாட்டியாத்தானே இருக்கே, உன்னை எப்படி கல்யாணத்துக்குக் கூப்பிடறதுன்னு கேக்கறான்."

"அவரு காசு மட்டும் வேண்டியிருந்ததோ...?"

"வேறு வழியில்லாத ஏத்துக்கிட்டானாம்."

"ஆச்சி அறியத்தானே வாழ்ந்தேன்."

"அதெல்லாம் மரியாதை இல்லையாம்."

"அவன் மரியாதை கெடறப்போ மறுபடியும் வருவான். அப்ப நான் பார்த்துக்கறேன். இந்தக் கோழியையும், காப்பிக் கொட்டைப் பையையும் ஆச்சிகிட்டக் கொடுத்துட்டு அப்புறம் ஊருக்குப் போங்க."

இருபது வருடங்களில் ஆச்சியும் அவளும் ஆறு முறைதான் சந்தித்துக் கொண்டிருக்கிறார்கள். அதில் இரண்டு முறைதான் பேசிக் கொண்டார்கள்.

முதல் முறை போகிற போது ஆச்சி கண்கள் பளபளக்க ஒரு வார்த்தை சொன்னாள்.

"சரியோ; தவறோ, மேலேயோ; கீழேயோ எதையும் அழிக்காதிரு. ஆக்கமா இரு. இருபது ஏக்கரை நாற்பது ஏக்கரா மாத்து. நம்ம சுத்தி இருக்கறவங்க சந்தோஷமா இருந்தாதான் நாம சந்தோஷமா இருக்க முடியும். எல்லா உறவும் சந்தோஷத்துக்குத்தான். சண்டைக்கு இல்லை. சாப்பாட்ல ரொம்ப காரம் போடாதே. அவருக்கு ஆகாது."

பகவதி அதிர்ந்து போனாள். நாச்சியப்பன் சொல்லித்தான் திருமணம் செய்தாரென்றாலும் ஆச்சி பேசியதைக் கேட்டதும், அனுமதி வாங்கிக் கொண்டு தன்னைத் திருமணம் செய்திருப்பாரோ என்று தோன்றியது.

"எனக்கு ஆறு மாதம் வரைக்கும் தண்ணில கண்டம் இருக்குன்னு சொன்னீங்களே...?"

"ஆமா.... அதுக்கென்ன இப்ப?"

"நேற்றோடு ஆறு மாதம் முடிஞ்சு போச்சு; இனிமே குளிக்கலாமா ஜோசியரே?"

— சீர்காழி. வி. ரேவதி



## நீங்கள்....

ஒன்றை ஆழமாக உணர்ந்து, உணர்ந்ததை அழகாக வெளியிடவும் செய்கிறீர்கள் என்றால் ஒரு நல்ல கலைஞராகி விட்டீர்கள் என்று கூறலாம்.

- டாக்டர் மு. வரதராசன்
தகவல் : பா. குணா

"நமக்குக் கேரளால இருபது ஏக்கர் ஏலக்காய் தோட்டம் இருக்கு. எப்பவோ எங்க மூதாதையர் வாங்கிப் போட்டது. வாங்கினப்போ ஏலக்காய்க்கு அவ்வளவு மரியாதை இல்லை. இன்னிக்கி ஏலக்காய் தங்கம் மாதிரி. பணப் பயிரு. பார்த்துப் பார்த்து வளர்க்க வேண்டிய பயிரு. ஆறு மாசம் கண்ணு கொத்தி பாம்பா மலைலேயே இருந்து கவனிச்சுக்கிட்டு வந்தா நல்ல லாபம். ஏலக்காய் தவிர, அரிசி, வெங்காயமெல்லாம் கீழேர்ந்துதான் வந்தாகணும். மலைல நல்லபடியா வீடு கட்டி, ஆள் போட்டு சமைச்சுப் பார்த்தேன். வந்த ஆளுக்கு மலை ஒத்துக்கல. நானா சமைச்சுப் பார்த்தேன். வயிறு ஒத்துக் கலை. இருபது பவுன் நகை போடறேன். எங்கேயாவது தாலி கட்டறேன். நீங்க வர்றதா இருந்தாலும் சரி. உங்க பொண்ண மட்டும் அனுப்பறதா இருந்தாலும் சரி. எல்லா வசதி யையும் ஏற்படுத்திக் கொடுத்து ஒழுங்கா குடித்தனம் பண்ணுவேன். அந்தரத்துல விட்டுடுவேன்னு ஒரு போதும் நினைக்காதீங்க."

திருமணமான போது அவளுக்குப் பதினெட்டு, அவருக்கு நாற்பது. வயது நாற்பதானாலும் வாலிபம் மலை போல் உறுதியாய் இருந்தது. மனசு நீர்பட்ட மண் போல் குழைவாய்க் கிடந்தது.

"நம்ம தோட்டத்துக்கும் ஸ்ப்ரிங்ளர் போடணும். அவ்வளவுதானே..."

ஸ்ப்ரிங்ளர் வாங்கின நேரம் மழை பெய்யாமல் போயிற்று. மழை பெய்தால் ஸ்ப்ரிங்ளர் தேவையே இல்லை. அவர்கள் தோட்டத்தில் மட்டும் இடைவிடாது ஸ்ப்ரிங்ளர் அடித்தார்கள். இரவு நேரம் மற்ற தோட்டத்திற்கு வாடகைக்குக் கொடுத்தார்கள். இருபது அடி நீள குழாயில் கப்ளிங் போட்டு மலை மீது படர விட்டு, பள்ளத்திலிருந்து மேட்டுக்கு நீர் ஏற்றினார்கள். விளையாட்டாய் பகவதியைச் சந்தோஷப்படுத்த வாங்கிய ஸ்ப்ரிங்ளர் பெரிய உதவி செய்தது. மற்ற தோட்டத்தில் ஏலக்காய் செடிகள் பட்டுப் போக, இங்கு இடைவிடாது பறித்தார்கள். என்றும் கண்டிராத விலைக்கு விற்றார்கள்.

"நீ இல்லாது போயிருந்தா தோட்டம் பாழாயிருக்கும். நான் உன்னை ஆசைக்கு கட்டிக்கல பகவதி. ஒரு அவசியத்துக்குக் கட்டிக்கிட்டேன். ரெண்டாவது பொம்பளதானேன்னு நினைக்காத... எப்பவும் நான் இருக்கணும்னு எதிர்பார்க்காத. மனுஷாளுக்கு முதல்ல வேண்டியது சாப்பாடு. துணிமணி. அது ஒருபோதும் உனக்குக் குறையாது. அடுத்து வேண்டப்பட்டது மரியாதை. அதிலேயும் நாச்சியப்பன் குறை வைக்க மாட்டான். மதுரைல வண்டியெடுத்தா நாலரை மணி நேரம். நம்ம தோட்ட வாசலுக்கு வந்திர முடியும். ஒரு அவசரம் போதுன்னா நானும் வருவேன். நீயும் வரலாம்."

ஒரு தீபாவளிக்குக் கடும் மழை. மண் சரிந்து மரம் நழுவி பின் கூரையில் விழுந்து பசு மாட்டைக் காயப்படுத்தி விட்டது. காற்று வீசி, வீசி அடித்ததால் இன்னொரு மரமும் கூரை மேல் விழுகின்ற அபாயம் இருந்தது. அப்பாவுக்கு ஜுரம், அம்மாவுக்குத் தைரியமில்லை. அவள் ஏழு கிலோ மீட்டர் இறங்கி நடந்து, ஆறுகளும் ஓடைகளும் தாண்டி, பாதையில்லாப் பாதைகளில் குச்சி ஊன்றி நடந்து, பஸ் பிடித்து மதுரைக்குப் போனாள்.

மதுரையில் நசநசவென்று தூறல் மட்டுமே இருந்தது. சைக்கிள் ரிக்ஷாக்காரனுக்கு வீட்டு விலாசம் சொல்லி வாசலில் இறங்கினாள்.

"அம்மா அந்தப் பொம்பள வந்திருக்கு."

ஒரு பதினைந்து வயதுப் பையன் உள்ளே ஓடினான். சிவப்பு புடைவையில் தடிமனான முப்பத்தைந்து வயதுப் பெண் பிள்ளை ஹாலுக்கு வந்தாள். அங்கிருந்தபடியே உற்றுப் பார்த்தாள்.

"நீதான் தோட்டத்தப் பார்த்துக்கறவளா?"

அதட்டலாய் குரல் வந்தது.

"ஆமா."

"ஏன் மதுரைய பார்க்க வந்துட்ட..."



"உங்க கணவரை ஏன் டைவர்ஸ் பண்ணினீங்க?"

"ஒரு வக்கீல் நண்பர் கூட பேசிட்டிருந்தப்ப கேஸே எதுவும் இல்லைன்னு சொன்னார்; அதான் இரக்கப்பட்டு டைவர்ஸ் கேஸாவது இருக்கட்டுமேன்னு கொடுத்தேன்!"

— சீர்காழி. வி. ரேவதி

"வீடு விழுந்துடுச்சு. மாட்டுக்கு அடிபட்டுடுச்சு. அப்பாவுக்கு ஜுரம். எனக்கு என்ன பண்றதுன்னு தெரியலை. இன்னொரு மரம் விழுந்தா தங்கறதுக்கு இடமே இல்லை."

"அவங்க பண்டிகை கொண்டாடிட்டு தூங்கறாங்க. எழுப்பட்டுமா?"

"வேண்டாம். எழுந்த பிறகு சொல்லுங்க."

"பின்பக்கமா வந்து காலை கழுவிட்டு உட்காரு."

காப்பியும், அவல் உப்புமாவும் தரப்பட்டன.

ஆச்சி பேசிய அளவு கூட நாச்சியப்பன் பேசவில்லை.

"இவன்தான் புள்ளை."

பையனை நெட்டி முன்னே தள்ளினார். அவன் விநோதமாய் அவளைப் பார்த்து விட்டு உள்ளே போய் விட்டான்.

தினத்தந்தி பேப்பரில் பட்டுப் புடைவை சுற்றிக் கொடுக்கும் போதுதான் ஆச்சி சொன்னாள்.

"சரியோ; தவறோ, மேலோ; கீழோ எதையும் அழிச்சுடாதே. சந்தோஷமா இருக்கத்தான் உறவு. சண்டை போடறதுக்காக இல்லை."

ஆச்சி ரொம்ப சந்தோஷமானவள் என்று நாச்சியப்பன் பலமுறை சொல்லி கேள்விப்பட்டிருக்கிறாள்.

"நம்ம கல்யாணத்தன்னிக்கு ஆச்சி என்ன பண்ணிட்டிருந்தாங்களாம், கேட்டீங்களா? அப்பவும் சந்தோஷமாத்தான் இருந்தாங்களாமா."

"மதுரைலேர்ந்து திருச்செந்தூருக்கு நடைபயணம் போயிட்டிருந்தா. ஒன்பது நாள் நடை. வழி முழுக்கப் பாட்டு. பூஜை. தினம் இருபது கிலோ மீட்டர் நடப்பா."

"எதுக்கு?"

"எல்லாரும் நல்லாருக்கணும்னுதான்."

"அப்ப நானும் நடக்கட்டுமா?"

"அடுத்த வருஷம் நீயும் சேர்ந்துக்க. ஆரு தடுக்கறது?"

அடுத்த வருடம் நடைபயணத்தோடு ஆச்சி மௌன விரதமும் புரிந்தாள். ஆச்சி பேசவில்லையே தவிர அன்பு, கண்களின் வழியே கொட்டியது. அவள் விரல் தொடும் போதெல்லாம் தெரிந்தது. அந்த முறை எல்லோருக்கும் ஏலக்காய் நன்றாக விளைந்தது. விலை குறைவதற்குப் பதிலாய் இன்னும் ஏறியது.

வட இந்தியாவிலிருந்து வியாபாரிகள் போடிநாயக்கனூர் வந்து, ஏலக்காயை நாலு வகையாய் தரம் பிரித்து, முதல்தர ஏலக்காயை போடியிலேயே ப்ளாஸ்டிக் பேப்பரில் இறுக்கமாய் பாக் செய்து, கலர் கலரான அட்டைப் பெட்டிகளில் வைத்து, காற்றுப் புகாத தகர டப்பாவில் அடைத்து ஐரோப்பாவிற்கும் அரேபியாவிற்கும் அனுப்பினார்கள்.

இரண்டாவது தரத்தை டெல்லி, பம்பாய்க்கு அனுப்பினார்கள். மூன்றாவது தரத்தை உள்ளூர் வியாபாரிகளிடம் விற்றார்கள். நான்காவது தரத்தை விலை நிர்ணயம் செய்து "கூலியாகக் காசுக்கு பதிலாய்க் கொடுத்தார்கள். ஒரு லட்ச ரூபாய் முதல் போட்ட பனியா இருபது லட்ச ரூபாய் லாபத்தோடு திரும்பினான்.. ஏலக்காய் பற்றி அப்போதுதான் வியாபாரிகளுக்கும் அரசாங்கத்திற்கும் ஒரு விழிப்பு வந்தது.

தோட்டம் வாங்க ஆட்கள் அலைந்தார்கள். ஒரு ஏக்கர் இரண்டாயிரம் ரூபாய் என்று இன்னொரு இருபது ஏக்கர் வாங்கிப் போட, நாச்சியப்பனுக்கும் அப்போதுதான் துணிச்சல் வந்தது. இன்றைக்கு ஏக்கர் அறுபத்தைந்தாயிரம் ரூபாய். அந்த முதலுக்கு லாபம் பார்க்க நான்கு வருடமாகும். ஆனாலும் முதல் போட ஆட்கள் அலைந்தார்கள்.

"ஏக்கர் லட்ச ரூபாய்க்கு கேக்கறான். வித்துட்டு மதுரைக்குப் போயிடுவோம். வரியா?"

மலையை விட்டு தரைக்கு வர அவளுக்கு விருப்பமில்லை.

"இந்த இடத்தை விட்டு நான் வர மாட்டேன். நீங்களும் எங்கேயும் போக வேண்டாம்."

அவன் சொன்ன மூன்றாம் மாதம் நாச்சியப்ப செட்டியார் சிவலோகப்ராப்தியடைந்தார். பகவதிக்கு மலை, பயமாக இருந்தது.

(தொடரும்)




# சத்யபாலா நிதி லிமிடெட்

**மத்திய அரசின் அங்கீகாரம் பெற்ற**
**"பரஸ்பர சகாய நிதி" நிறுவனம்**



**Nidhi Company Approval No : 37/27/93-CL III**

*சரவணா காம்ப்ளக்ஸ் எண் 36, பிள்ளையார் கோயில் தெரு, பல்லாவரம், சென்னை - 43*

**Tel : 405788/404351, Fax : 044-402981, Grams : "SATYABALA"**

| | | |
|---|---|---|
| பாதுகாப்பு பெட்டக வசதி உண்டு | வயதானோர் மற்றும் மகளிருக்கு கூடுதல் 0.5% வட்டி மற்றும் சிறப்புப் பரிசு | சிறப்பு டெபாசிட் சேகரிப்பு மாதம் |

**பிக்சட் டெபாசிட் :**

| 46 நாட்கள் | 90 நாட்கள் | 6 மாதங்கள் | 1 ஆண்டு | 2 ஆண்டுகள் | 3 ஆண்டுகள் | 4 ஆண்டுகள் | 5 ஆண்டுகள் |
|---|---|---|---|---|---|---|---|
| 13% | 14% | 15% | 17% | 18% | 18.5% | 19% | 20% |

*** 5 வருடங்களுக்கு–டெபாசிட் ரூ.50,000 அதற்கு மேலும் – வட்டி 21%**

**சிறப்பு டெபாசிட் திட்டங்கள்**

| டெபாசிட் ரூ | ஆண்டுகள் | திரும்பக் கிடைக்கும் தொகை ரூ |
|---|---|---|
| 600/- | 25 | 60,000 |
| 4500/- | 12.5 | 50,000 |
| 6500/- | 15 | 1 லட்சம் |
| 9500/- | 20 | 5 லட்சம் |
| 20,000/- | 25 | 25 லட்சம் |

**சத்யபாலா மறுமுதலீட்டுத் திட்டம்**

| டெபாசிட் ரூ | மாதங்கள் | திரும்பக் கிடைக்கும் தொகை ரூ |
|---|---|---|
| 5000/- | 45 | 10,000/- |
| 10,000/- | 68 | 30,000/- |
| 25,000/- | 90 | 1,00,000/- |

*** வட்டிக்கு முன்தேதியிடப்பட்ட காசோலைகள்!**

*** உடனடி வட்டி டெபாசிட் திட்டம்**

*ரூ 5000/-மும் அதற்கு மேலும் 1 ஆண்டுக்கு டெபாசிட் செய்து வட்டி ரூ 725/- உடனடியாக பெறுவீர்.*

*** பிறந்த நாள் சிறப்பு டெபாசிட் திட்டம் :**

*உங்கள் குழந்தைகளின் ஐந்து பிறந்த நாளன்று ரூ. 1000-ஐ டெபாசிட் செய்தால் 6-ஆவது பிறந்த நாளிலிருந்து ரூ 1500-ஐ பிறந்த நாள் பரிசாக 50 ஆண்டுகள் பெறலாம்.*

* *குறைந்த வட்டிக்கு கலப ்தவணையில் நகை (கி. ரூ. 325/- வரை) மற்றும் அடமானக் கடன்* (No Area Restriction)

| தலைவர் | செயலாளர் | நிர்வாக ஆலோசகர் | இயக்குனர்கள் |
|---|---|---|---|
| நீதியரசர் G. இராமானுஜம் (ஓய்வு பெற்ற சென்னை உயர்நீதிமன்ற நீதிபதி) | திருமதி. K. இந்திராணி, M.A., B.Ed., | ஆடிட்டர் திரு. G. கனகராஜ், B.Com., F.C.A. | R. அன்பரசு M.P.<br>R. சேதுராஜன்<br>G. சுப்பாராஜ் |

**இதர குரூப் நிறுவனங்கள்**

**சத்யபாலா பைனான்ஸ் பிரைவேட் லிமிடெட்** (Deposits, Hire Purchase, Leasing)
**சத்யபாலா பைனான்சியல் சர்வீஸஸ்** (OTCEI Dealer - Stock & Share Brokers, Loan Syndication)
**கிளைகள் :** *பம்மல், பட்டாபிராம், மேற்கு மாம்பலம், மதுரை, திருப்பூர், இராஜபாளையம், மற்றும்*
**விரைவில்** *தமிழகமெங்கும்.*

**நிறைவான சந்தோஷத்திற்கு! நிம்மதியான வாழ்க்கைக்கு! நாடுங்கள் உங்கள் சத்யபாலாவை.**

# ஜெ காப்டர் சென்னை வந்தது!

## ஜெயலலிதா வெள்ளோட்டம்!!

## அமைச்சர்கள் நேர்த்திக்கடன்!!!

**சென்னை, ஏப்ரல் 1.**

இன்று காலை சரியாக 9:30 மணிக்கு முதல்வர் ஜெயலலிதாவுக்காகத் தமிழக அரசு வாங்கியுள்ள பிரத்தியேக ஹெலிகாப்டர் சென்னை மீனம்பாக்கம் விமான நிலையத்தில் தரை தட்டியது.

அமெரிக்காவிலிருந்து சிங்கப்பூர் வழியாக வந்த இந்த ஹெலிகாப்டருக்கு "ஜெ காப்டர்" என்று பெயர் சூட்டப்படும் என்பதாக அமைச்சர் எஸ்.டி.எஸ். அறிவித்தார்.

**அங்கப் பிரதட்சிணம்**

ஹெலிகாப்டர் வந்துவிட்டதையொட்டி நடந்த பத்திரிகையாளர் கூட்டத்தில் தமிழக அரசின் தலைமைச் செயலரும் பல அமைச்சர்களும் கலந்து கொண்டனர்.

"விமானம் நன்கு இயங்கவும் புரட்சித் தலைவியின் பாதுகாப்புக்கு எந்தவித பங்கமும் நேராதிருக்கவும் அமைச்சர்கள், விமான நிலையத்தின் ரன்வேயில் குளித்துவிட்டு ஈரத்துணியுடன் அங்கப் பிரதட்சிணம் செய்வார்கள்" என்று அமைச்சர் இந்திரகுமாரி குறிப்பிட்டார்.

"ஜெ காப்டர் சரியாக ராகு காலத்தில் வந்து இறங்கியதுதான் இந்த நேர்த்திக் கடனுக்குக் காரணமா?" என்று ஒரு நிருபர் கேட்டபோது, "அமெரிக்கர்களுக்கு ராகு காலம் தெரியாது என்பது அனைவரும் அறிந்ததே; அதனால் அவர்கள் அந்த நேரத்தில் வந்து இறங்கச் செய்திருக்கலாம்" என்றார் அமைச்சர் எஸ்.டி.எஸ்.

என்றும் "ஊட்டி, கொடைக்கானல் என்று முதல்வர் பல நாள் ஓய்வுக்குச் சென்றால் கோப்புகளைச் சுமந்து செல்ல இன்னொரு குட்டி ஹெலிகாப்டர் வாங்கப்படும்" என்றும் தலைமைச் செயலர் தெரிவித்தார்.

"முதல்வர் வேறு ஊர்களுக்குப் போகும்போது மலர் தூவிய வரவேற்பு தரப்படும்" என்றார் அமைச்சர் கண்ணப்பன். "ஹெலிகாப்டர் விசிறிகள் சுழலும் வேகத்தில் மலர்கள் பறந்து விடுமாகையால் பூக்கள் முன்னதாகவே தரையோடு தரையாக ஃபெவிக்கால் போட்டு ஒட்டப்படும்" என்று விளக்கினார்.

**மூன்று தளங்கள்**

தஞ்சையில் ஒன்று, கொடைக்கானலில் ஒன்று, ஊட்டியில் ஒன்று என மூன்று ஹெலிகாப்டர் தளங்கள் உடனடியாக அமைக்கப்படும். அடுத்து எந்தெந்த ஊர்களுக்கு முதல்வர் போகத் திட்டமிடுகிறாரோ அங்கெல்லாம் தளங்கள் நிறுவப்படும்.

"முதல்வரோடு அமைச்சர்களும் பயணம் செய்ய வசதிகள் உண்டா?" என்று கேட்டதற்கு, "முதல்வரின் வசதிக்கே ஹெலிகாப்டரின் உள்ளே இடம் காணாது" என்றும், "வேண்டுமானால் அமைச்சர்கள் தொங்கிக் கொண்டு போகலாம்" என்றும், "இதற்காக ஜெ. காப்டரின் வெளிப்புறம் பிடிகள் பொருத்தப்படும்" என்றும் எஸ்.டி.எஸ். பதில் கூறினார்.

**எனக்குத்தான் தகுதி**

"முன்பு ஹெலிகாப்டர் ஊழல் இருந்தது;

...றார். "தவிரவும், ஹெலிகாப்டரின் பைலட், துணை பைலட் இருவரும் முதல்வருக்குத் தேவையான சமயத்தில் லீவில் போய்விடக் கூடும் என்பதால் மேலும் ஒரு பைலட்டும் துணை பைலட்டும் வேலைக்கு அமர்த்தப்படுவார்கள்" என்றார் ஹரிபாஸ்கர்.

**பிரசாரத்துக்கு**

"ஜெ காப்டர் தேர்தல் களத்தில் பயன்படுத்தப்படுமா? அதற்குத் தேர்தல் கமிஷனர் சேஷன் ஆட்சேபணை எழுப்புவாரா?" என்று கேட்டபோது, "அதி.மு.க. கட்சி, முதல்வரின் தேர்தல் பிரசாரத்துக்காக ஹெலிகாப்டரை அரசிடமிருந்து வாடகைக்கு எடுக்கும் என்றும், "ஒருவேளை வாடகை அதிகமாக இருந்து, கட்சியில் பணம் இல்லையானால், ஜெ காப்டரை, கட்சி விலைக்கு வாங்கிவிடும்" என்றும் "தேர்தல் முடிந்த பிறகு அரசுக்கே திரும்பவும் விற்று விடும்" என்றும் எஸ்.டி.எஸ். சொன்னார். "இந்த ஏற்பாட்டின்படி சேஷன் ஆட்சேபணை எழுப்புவதற்கில்லை" என்று சுட்டிக்காட்டினார்.

**கட்டை வண்டி**

"வெள்ளச் சேதம் போன்றவற்றைப் பார்வையிட ஆளுனர் விரும்பினால், அரசு ஹெலிகாப்டரைப் பயன்படுத்த அவர் அனுமதிக்கப்படுவாரா?" என்று கேட்டபோது, "அவரது பிரத்தியேக உபயோகத்துக்காக ஒரு கட்டை வண்டிக்கு ஆப்பிரிக்க நாடான டிம்பக்டூவில் தமிழக அரசு ஆர்டர் கொடுத்திருக்

"எங்களுக்கு முதல்வரின் நலன்தான் முக்கியம்; அதனால் பெண் எம்.எல்.ஏக்கள் எல்லாரும் வேப்பிலை கட்டி, தீமிதித்து, கோயில்களில் ஹெலிகாப்டருக்காக விசேஷ பூஜை நடத்துவார்கள். தவிர புதன்கிழமையன்று ஹெலிகாப்டருக்கே பூஜை போடப்படும். அதற்குப் பிறகு புரட்சித்தலைவி ஹெலிகாப்டரில் ஏறி விமான நிலையத்தை மூன்று முறை சுற்றிவந்து இறங்குவார்" என்றார் இந்திரகுமாரி.

"ஏன் விமான நிலையத்தையே சுற்றிவர வேண்டும்? அதற்குமேல் ஹெலிகாப்டர் பறக்காதா?" என்று ஒரு நிருபர் கேட்டபோது, "இதைவிட அதிக தூரம் போகாததற்குக் காரணம், முந்தைய ரிகார்டான சென்னை - என்னூர் ஹெலிகாப்டர் பயணத்தை முறியடிப்பதற்காகவே" என்று எஸ்.டி.எஸ். குறிப்பிட்டார்.

## குளுகுளு அறை

தமிழக அரசின் தலைமைச் செயலர் ஹரி பாஸ்கர் பேசுகையில், "புதிய ஹெலிகாப்டருக்கு ஒரு கோடி ரூபாய் செலவில் புதிய ஷெட் கட்டப்படும்" என்றும் மேலும் ஹெலிகாப்டரின் உட்புறத்தை முதல்வரின் வசதிக்காகத் திருத்தி அமைக்க இரண்டு கோடி ஒதுக்கப்பட்டுள்ளதாகவும், இதற்கு அயல் நாட்டு 'இன்டீரியர் டெகரேட்டர்'களின் உதவி கோரப்பட்டுள்ளதாகவும் சொன்னார்.

"ஹெ. காப்டரின் உட்புறம் என்ன வசதிகள் செய்யப்படும்?" என்று கேட்டதற்கு, தலைமைச் செயலர், "தற்போது பதிலளிக்க முடியாது" என்றும் "பொறுத்திருந்து பாருங்கள்" என்றும் கூறினார். என்றாலும் ஜெயலலிதாவுக்குத் தனி அறையும் சசி (சசி) கலாவுக்கு மற்றோர் அறையும் மற்றும் குளியல் அறைகளும் குளுகுளு அறை வசதிகளுடன் நிறுவப்படும் என்பதாகத் தெரிய வருகிறது.

"ஹெலிகாப்டரில் காரியாலய அறை இருக்குமா?" என்று கேட்டதற்கு, "அதற்கு அவசியம் இல்லை" காப்டர் தளங்கள் அமைக்கும் ஊழல்; அதன் உடபுறத்தை முதல்வர் வசதிக்காக மாற்றி அமைக்கும் ஊழல் என்று, பல ஊழல்கள் நடக்க வசதி ஏற்பட்டுள்ளது" என்று கருணாநிதி கூறியுள்ளாரே?" என்று ஒரு நிருபர் கேட்டதற்கு, "கருணாநிதிக்கு ஊழல் பற்றிப் பேசத் தகுதி இல்லை; எனக்குத்தான் இருக்கிறது" என்றார் எஸ்.டி.எஸ்.

"முதல்வரின் பாதுகாப்பு கருதித்தான் ஹெலிகாப்டர் வாங்கப்பட்டிருப்பதாகக் கூறுகிறீர்கள்; ஆனால் ஹெலிகாப்டருக்கே பாதுகாப்பு தேவைப்படுமே?" என்று சுட்டிக்காட்டப்பட்டபோது, "அதற்காகத்தான் போலீஸை நவீனப்படுத்த மத்திய அரசிடம் நூறு கோடி ரூபாய் கேட்டிருக்கிறோம்" என்றார் தலைமைச் செயலர் ஹரிபாஸ்கர். "மத்திய அரசு ஒத்துழைக்கவில்லை என்றாலும் மாநில அரசே 20 கோடி செலவில் கறுப்புப் பூனைகளுக்குப் பயிற்சி தந்து, இரவு பகல் காவல் இருக்கச் செய்யும்" என்றார்.

## தப்பி ஓடவா?

"ஜெயலலிதா அமெரிக்காவுக்குத் தப்பிஓட வசதியாகத்தான் ஹெலிகாப்டர் வாங்கப்பட்டிருப்பதாக சுப்ரமணிய சுவாமி சொல்கிறாரே?" என்று கேட்டபோது, "இது சுப்பிரமணிய சுவாமியின் அறியாமையைத்தான் எடுத்துக்காட்டுகிறது" என்று ஆர்.எம்.வீ. குறிப்பிட்டார். "அமெரிக்காவுக்குப் போக வேண்டுமென்றால் ஹெலிகாப்டர் போதாது; ஜெட் விமானம் தேவை என்பதை சுசுவாமிக்கு நினைவூட்ட விரும்புகிறேன்" என்று ஆர்.எம்.வீ. சொன்னார்.

"கவலையே வேண்டாம்! ஜெட் விமானத்துக்கும் ஆர்டர் கொடுத்தாகிவிட்டது; விரைவில் வந்து சேரும்" என்று எஸ்.டி.எஸ். கூறி, நிருபர்கள் கூட்டத்தை முடித்து வைத்தார்.

— செம்பியன்



# பத்மா ரவிசங்கர்

**சென்னை, ஜனவரி 7, 1995**

தொடுவானத் தொலைவிலிருந்து கலகலவென்று ஒரு கேலிச் சிரிப்பு. மிக அருகில் வேங்கையின் உறுமல். தையா தக்காவென்று கற்கால சாடிஸ நடனம். ஏதோ 'தேவ' பாஷையில் பேச்சுக் குரல்கள். இடையே பூனையின் மியாவ். சுரீரென்று வலி. விர்ர்ரென்ற வாகன ஒலி. என்ன வேகமாக ஹஸ்த்திரா செல்கிறது... அவ்வளவுதான், பிடிவாதமாக ஊசலாடிய சூர்யாவின் துளி நினைவும் தப்ப... மத்தாப்புப் பொறிகள் காணாமல் போய் முடிவில்லாத இருண்ட பள்ளத்தினுள் பயணித்து...

பொழுது விடிந்து இரண்டு மணி நேரம் கழித்துத்தான் சூர்யாவுக்கு முழுமையான விழிப்பு கண்டது. விண்விண்ணென்று அவனுக்குப் பின் தலைவலித்தது.

அவ்வளவு இக்கட்டிலும் அவனுக்குச் சிரிப்பு வந்தது. இம்மாதிரி எவ்வளவோ முறை அவன் அடைப்பட்டிருக்கிறான். ஆனால் ஒவ்வொரு முறையும் ஏதாவது கடைசி நொடி தகிடு தத்தம் செய்து தப்பித்திருக்கிறான். சென்ற முறை ஷூ லேஸ் நூல் கொண்டு சாகசமாக–

பரவசமான பழைய நினைவிலிருந்து விடுபட்டு நிலைமையைக் கணித்தான். அவன் ஷூ அகற்றப்படவில்லை. விசேஷ கைக்கடிகாரம் விட்டு வைத்திருந்தார்கள். உடைகள் அகற்றப்படவில்லை. ஆயினும் சூர்யாவின் சுதந்திரம் சுத்தமாகத் தொலைந்திருந்தது. அமர்ந்த நிலையில் வலுவான கயிறு கொண்டு கை, கால்கள் அசைக்க முடியாமல் நாற்காலியுடன் இறுகப் பிணைத்திருந்தார்கள்.

அது ஒரு விசாலமான அறைதான். அதன் வாசல் கதவும் ஜன்னல்களும் சாத்தப்பட்டிருந்தன. ஜன்னலின் மழுப்பப்பட்ட கண்ணாடிக் கதவுகள் தாராள வெளிச்சம் அனுமதித்திருக்க, சுவரில் வெகு உயரத்தில் அவனைக் கேலி செய்வது போல ஒரு சிறு வென்டிலேட்டர். இவன் அமர்ந்திருந்த நாற்காலி தவிர்த்து வேறு ஃபர்னிச்சர் இல்லை.

சில நிமிடங்களில் அவன் தப்பிப்பது இயலாத காரியம் என்று புரிந்து கொண்டான். இது ஒரு வீடுதான். சென்னை மாநகரில் இது எந்த இடம்? வெளி உலக ஒலிகளே கேட்காமல் அமைதியாக இருந்தது.

அரை மணி கழித்து அவர்கள் வந்தார்கள். ஒவ்வொருவராக.

கதவு திறந்து முதலில் பிரவேசித்தவன் பெயர் மாலிக்.

"வா மாலிக்! உன் சமாதியில் புல் முளைத்து விட்டதாக அல்லவா நினைத்திருந்தேன்!" என்று சூர்யா சிரித்தான். ஆக, பாகிஸ்தானுக்குத்தான் மூக்கு வியர்த்தது...

சூர்யாவை மிக வெறுப்புடன் பார்த்த மாலிக்கிற்கு ஏறக்குறைய மொட்டை போல ஒட்ட வெட்டப்பட்ட தலைமுடி. சாடிஸம் மின்னும் கண்கள். அபாயமானவன். பாகிஸ்தானின்



டாப் ஏஜெண்ட். நெற்றியில் இருந்த வெட்டுத் தழும்பு, முன்னர் சூர்யா அளித்த பரிசு.

அடுத்து வந்தவனைப் பார்த்ததும் சூர்யா அதிர்ந்தான். இரண்டாவதாக வந்த ரேப் வில்லனின் வட்டக் கழுத்து பனியனையும், குறுந்தாடியையும் எப்படி மறக்க முடியும்? அப்படியானால்... அப்படியானால்...

"ரொம்பத் திணறாதே சூர்யா! உன் பட்டாணி சைஸ் மூளையைக் கஷ்டப் படுத்தாதே!" என்று இகழ்ச்சியுடன் சிரித்த மாலிக்,

# சுட்டுவிடு சூர்யா!



"பாகிஸ்தான் உளவுத் துறையில் சமீபத்தில் சேர்ந்த அற்புதத்தை உனக்கு அறிமுகப்படுத்துவதில் பெருமைப்படுகிறேன்! நவ் அவர் லேட்டஸ்ட் ஸ்பை சென்சேஷன்.. வெல்கம் நூரு!" என்று சிரம் தாழ்த்தி நாடக பாணியில் இரு கைகளை விரித்தான்.

அறை வாசலில் கங்கா!

உச்ச வோல்ட் கரண்ட்டில் கை வைத்தது போன்ற அதிர்ச்சி அடைந்த சூர்யாவைத் திருப்தியுடன் பார்த்தவாறு தலை நிமிர்ந்து கம்பீரமாக நடந்து உள்ளே வந்தாள் கங்கா.

சூர்யா உணர்ச்சி வசப்பட்டு, "கங்கா நீயா?" என்றான் உதடு துடிக்க.

"ப்பூ! கங்காவா? யார் அது?" என்று அலட்சியமாகச் சிரித்தாள். சூர்யாவைப் பூச்சி போலப் பார்த்தாள். அவன் வாங்கிக் கொடுத்த ஆடையில்தான் இன்னமும் இருந்தாள். அவள் வாய், விடாமல் சூயிங்கம் மென்றது; முகம் இறுகியிருந்தது. தீவிரமான கண்கள். மென்மையான அந்த கங்கா எங்கே?

அவளிடம் அனாயாசமான அசைவுகள். சூர்யாவைக் 'கவர்' செய்யும் எச்சரிக்கை பார்வை. அவள் ஓர் தேர்ந்த உளவு ஏஜெண்ட் என்பதைச் சந்தேகமறத் தெரிவித்தாள்.

"எவ்வளவு திறமையாக நடித்திருக்கிறாய்!"

"இந்தியர்கள் முட்டாள்கள் என்பதை இப்போது நம்புகிறாயா மாலிக்? எவ்வளவு சுலபமாக ஏமாறுகிறார்கள் பார்! ஹூம்.. நம் துறையில் அனாவசியமாக சூர்யாவிற்கு புத்திசாலி என்று உயர் ரேட்டிங்!" என்றாள் விசனமாக. "இவனே இப்படி என்றால், மற்றவர்கள்..." சிரித்தாள்.

"போடி காதல் துரோகி!" என்றான் மகா வெறுப்புடன்.

"காதல்! அதுவும் ஓர் இந்திய நாயுடனா! கேட்டாயா மாலிக் இந்த ஜோக்கை!"

மூவரும் உரக்கச் சிரித்தார்கள்.

"இக்கட்டில் பெண்ணைக் காப்பாற்றும் ஒரு இந்தியனின் வீக்னஸை நன்றாகவே பயன்படுத்திக் கொண்டாய் கங்கா! திறம்படத்தான் திட்டமிட்டிருந்தாய். என்னிடம் அறிமுகமாகும் நபர்களின் 'பூர்வாசிரமத்தை' விசாரிக்கச் சொல்லி 'வெரிஃபை' செய்வேன் என்பதை நன்கு உணர்ந்து 'கற்பழிப்பு முயற்சி' என்று துணிகரமாக 'செட்டப்' செய்து அதிர்ச்சியால் சௌகரியமாக நினைவிழப்பு, அதனால் விளைந்த பரிதாபம், உடன் ஒட்டிக் கொள்ள வசதி என்று எத்தனை மாங்காய் அடித்திருக்கிறாய்! உன்னை நான் பாராட்டுகிறேன் நூரு என்கிற கங்காவே!"

"உன் பாராட்டைத் தூக்கிக் குப்பையில் போடு சூர்யா. நேராக விஷயத்திற்கு வருவோம். எதற்காக சென்னை வந்தாய்? என்ன உன் ரகசியம்? எதை, எங்கே ஒளித்து வைத்திருக்கிறாய்? உம். எல்லாம் மடமடவென்று சொல்" என்றாள் உணர்ச்சியற்ற குரலில்.

சூர்யா அழுத்தமாகப் புன்னகைத்தான்.

"கை வீசிக்கொண்டு வந்தான் என்கிறாய் நூரு. ஏதாவது மைக்ரோ ஃபிலிமாகத்தான் இருக்கும். சூர்யாவை எனக்குத்



டாக்டர் : உங்க மனைவிக்கு ஊசி போடும்போது நீங்க ஏன் கத்துறீங்க?

வந்தவர் : 'எனக்கு ஊசி போடும்போது பார்த்துக்கிட்டு சும்மா இருந்தீங்களே...!'ன்னு வீட்ல வந்து திட்டுவாளே, அதுக்காகத்தான்!

- தேனி. எஸ். மாரியப்பன்



"நீங்க அமைச்சரா இருக்கலாம் அதுக்காக, 47 வது தெரு, 47 வது கதவு எண், 47 ரூம் உள்ள வீடு, போன் நம்பர் 47, கார் நம்பர் 47, என்று கேட்டு அடம் பிடிச்சா எப்படி?"

- பஞ்சவர்ணமகன்

• • •

ஒரு திரைப்படப் பாடல்கள் அடங்கிய ஆடியோ கஸெட் ரூ. ஆறு லட்சத்திற்கு ஏலம் போயிற்று என்றால் நம்ப முடிகிறதா? தாசரி நாராயணராவின் புதிய திரைப் படமான 'மாயா பஜார்' பாடல்கள் அடங்கிய கஸெட் வெளியீட்டு விழா ஹைதராபாத்தில் நடந்தது. விழாவின் முடிவில் கஸெட் ஒன்றை ஏலம்விட்டு அதில் கிடைக்கும் பணத்தை ஆந்திர முதல்வர் என்.டி.ஆரின் காலமான முதல் மனைவி பெயரில் அமைந்துள்ள புற்றுநோய் ஆஸ்பத்திரிக்கு அளிக்க விரும்பினார், தாசரி. ரூ. 10,000 த்தில் ஏலம் ஆரம்பமாயிற்று. தாசரி தானே ஒரு லட்சம் என்று ஏலம் கோர, அவரைத் தொடர்ந்து பலரும் ஏலத் தொகையை அதிகரித்துக் கொண்டே போக, கடைசியில் ரூ. ஆறு லட்சத்திற்கு சஞ்சய் ரெட்டி ஏலம் எடுத்தார்!

ஆதாரம் : ஸ்கிரீன்

தகவல் : எஸ். ஆலன்

தெரியாதா? நீ இந்த முறை தப்ப முடியாது ராஸ்கல்! வீணாக அடிபடாமல் சொல்லிவிடு" என்றான் மாலிக் குரூரமாக.

"சாரி எவ்ரிபடி!"

"இது பெரிய விவகாரம். உன்னைத் துண்டு துண்டாக வெட்டவும் தயங்க மாட்டோம். ஃபிலிமை எங்கே ஒளித்து வைத்திருக்கிறாய்?" மிரட்டினான் 'ரேப்' தடியன்.

மாலிக் ரப்பென்று சூர்யாவின் கன்னத்தில் அறைந்து கும்மென்று வயிற்றில் குத்துவதை அசுவாரசியமாகக் கவனித்தான் 'கங்கா.'

சூர்யா வலியினூடே, "போடா போ! என் இனிய இந்தியாவை வெற்றி கொள்ள இன்னும் ஆயிரம் வருஷங்களானாலும் முடியாது!" என்றான்.

மாலிக் கண்கள் ஜொலிக்க, "நாரு, நீ புதியவன். இந்திய இரத்தம் பார்த்திருக்கிறாயா?"

வட்டக் கழுத்து பனியன் ஆசாமியின் கையில் ஒரு விநோத ஆயுதம் முளைத்தது. அது ஊசி போலவும், ஸ்க்ரூ டிரைவர் போலவும் இருந்தது.

சித்திரவதை துவங்கியது. சூர்யாவின் மகா மௌனம்.

ஹூம்... சூர்யாவின் தீவிர நாட்டுப் பற்று மற்றும் தளராத அசாத்திய மனவலிமை... சாடிஸ சந்தோஷத்துடன் செய்த டார்ச்சரைப் பாதியில் நிறுத்திவிட்டு மூவரும் வெளியே செல்ல, உச்ச வேதனையில் கண் மூடினான் சூர்யா.

சிறிது நேரத்தில் அவர்கள் திரும்பினர். மாலிக் கையில் ஒரு இன்ஜெக்ஷன் ஊசி.

"முரண்டா பிடிக்கிறே... இந்த 'விசேஷ' ஊசிபட்ட எவ்வளவு விரைவா மனசைத் திறந்து காண்பிக்கப் போறே பாரு!"

குறுந்தாடி கண்ணில் வெறி மின்ன, "மருந்துல மார்ஃபைனும் கலந்திருக்கா பாஸ்?"

"விஷயம் தெரியாம உளறாதே என்ன?" என்று மாலிக் சீறினான்.

திமிர இயலாத சூர்யா புஜத்தில் 'மனமர்மத் திறவுகோல்' செலுத்தப்பட்டது. சில வினாடிகளில் அவனைக் கிர்ரென்று கிறக்கம் சூழ்ந்தது. களைப்பது போல் சிரித்தான். சூரியன் பிரகாசமாக அருகில் வந்தது. பின் எல்லாம் அடங்கி, அடர் நீல சன்ன ஒளி. ஒருவித ஆழ்ந்த நிலைக்கு இட்டுச் செல்ல, கேள்விகள் மெல்ல மிதந்து வந்தன... சிறிது நேரத்தில், அவன் 'மயக்கம்' தெளிந்து பார்த்த போது–

சூர்யாவின் உள்ளாடையில் இரு மெல்லிய துணிகளுக்கிடையில் வைத்துத் தைக்கப்பட்ட அந்த மைக்ரோ ஃபிலிம்–

**மேக்சிமா - குரூப் நிறுவனங்களின் தமிழ் புத்தாண்டு வாழ்த்துக்கள்**




மேக்சிமா பெனிபிட் பண்ட் லிமிடெட்
மேக்சிமா கிரெடிட் லிங்க்ஸ் (பி) லிமிடெட்
மேக்சிமா சிட்ஸ் மெட்ராஸ் (பி) லிமிடெட்
மேக்சிமா இன்வெஸ்ட்மெண்ட் & பைனான்ஸ் கம்பெனி

உங்கள் முதலீட்டிற்கு

# 25%

வட்டி+
1% ஊக்கத்தொகை
வழங்குகிறது

ஒவ்வொரு மாத வட்டிக்கான காசோலை மொத்தமாக முதலீடு செய்யும் பொழுதே வழங்கப்படும்.

**உங்கள் வருங்காலக் கனவுகளை நனவாக்கும் வளமான சேமிப்புத் திட்டங்கள்.**

| | | |
|---|---|---|
| பிக்சட் டெபாசிட் | ஒவ்வொரு மாதம், காலாண்டு, அரையாண்டுகளில் வட்டி வழங்கப்படும். | குறைந்தபட்ச முதலீடு ரூ.5,000/- |
| குமுலேட்டிவ் டெபாசிட் | 45.60% P.A அதிக பட்ச வட்டியாக பெறுவீர் | ரூ.5,000/- |
| கோல்டன் டெபாசிட் | முதலீடு 3 வருடங்களில் இருமடங்காகும் | ரூ. 7 500/- |

**மேக்சிமா - உங்கள் முதலீட்டிற்கு முழுப் பாதுகாப்பு அளிக்கக் கூடியது.**

| காலம் | வட்டி |
|---|---|
| 12 மாதங்கள் | 26.80 % |
| 24 மாதங்கள் | 30.40 % |
| 36 மாதங்கள் | 32.66 % |
| 48 மாதங்கள் | 39.67 % |
| 60 மாதங்கள் | 45.60 % |

மேலும் விவரங்களுக்கு
**மேக்சிமா இன்வெஸ்ட்மெண்ட் & பைனான்ஸ் கம்பெனி**
**பதிவு அலுவலகம் :** 1, வேதாந்த தேசிகர் தெரு, லஸ் பஜார் அருகில், மயிலாப்பூர், சென்னை - 600 004. தொலைபேசி : 4941849, Fax : 044-4347655. தந்தி : MAXFIN
**தலைமை அலுவலகம் :** 146, எல்டாம்ஸ் ரோடு, சென்னை - 600 018. தொலைபேசி : 456950 / 458549 / 452559
**கார்ப்பரேட் அலுவலகம் :** 'ஜெயம் பில்டிங்' AA-147, 3வது அவின்யூ, அண்ணா நகர், சென்னை - 600 040 தொலைபேசி : 6280468

Aparna

**கிளை அலுவலகங்கள் :-**

K.R. பில்டிங் 124-A, லேட்டிஸ் பிரிட்ஜ் ரோடு, அடையாறு, சென்னை - 600 020 தொ.பே. 415511

'ராஜ ராஜேஸ்வரி டவர்' 567-568, டாக்டர் நஞ்சப்பா ரோடு, காந்திபுரம், கோயம்புத்தூர்-641 018. தொ.பே. 231938

***மேக்சிமா - அதிகபட்ச நம்பிக்கைக்குரியது.***

தற்சமயம் கொக்கரிக்கும் 'கங்கா' வசம்! "பார்த்தாயா! பார்த்தாயா! இனி ஹஸ்த்திரா என்ற நவீன ராக்கெட் என் பாகிஸ்தான் வசம்! வேறு பெயரில்! வெளியே சொல்லவும், விழுங்கவும் முடியாமல் உன் நாடு விழிக்கும்!"

சூர்யா கசப்புடன், "இதை விட நேர்மையற்ற வழி இருக்க முடியாது! ஹூம்... இதெல்லாம் உங்களுக்குப் பழக்கமானது தானே..."

"வாயை மூடுடா இந்தியப் பதரே!" வெறியுடன் சீறி சூர்யா முகத்தில் குத்தினான் மாலிக் "ஆல்ரைட். இனித் தாமதிக்காமல் அகன்று விடுவது நல்லது."

"என் முட்டாள் 'காதலனுக்கு' மரணப் பரிசை நானே அளிக்கிறேன்!" சொன்ன கங்காவின் கையில் துப்பாக்கி.

தன்னைக் குறி பார்க்கும் துப்பாக்கியை சூர்யா இமைக்காமல் பார்த்தான்.

"என்ன பார்க்கிறாய் சூர்யா? உன் துப்பாக்கிதான்! இப்போது உன்னையே கடப் பயன்படுகிறது! எப்படி? வித்தியாசமாயில்லை?" கண்களை உணர்ச்சி தொடாமல் சிரித்தான்.

ரேப் வில்லனும், மாலிக்கும் மிதப்பாகச் சிரித்தனர்.

"சம்பிரதாயமாக மூன்று எண்ணிச் சுடுவார்கள். போனால் போகிறது. காதலனுக்காக ஐந்து எண்ணட்டுமா?"

சாவு பற்றிச் சற்றும் பயமின்றி சூர்யா அவள் கண்களை நேராகச் சந்தித்தான்.

"1...2...3..."

**அ**ப்போது படீரென்று ஒரு ஓசை. சூர்யாவின் வீங்கிய முகம் முறுவலித்தது.

மாலிக் சந்தேகமுடன், "நில் நூரு! அது என்ன ஓசை?"

சூர்யா சர்வ சாதாரணமான குரலில், "ஒன்றுமில்லை மாலிக்! இந்த வீட்டின் வாசற்கதவு தகர்க்கப்படும் ஓசை!"

அவன் சொல்லி முடித்த வினாடி, அவர்கள் என்ன ஏது என்று சுதாரிப்பதற்குள்–

கூடச் சித்தமாயிருந்த ஆட்டோமேடிக் ரைஃபின் ரகங்களுடன் ஏழு பேர் கொண்ட படை ஒன்று திமுதிமுவென்று அறையினுள் பிரவேசித்து மூன்று பாகிஸ்தானிய உளவாளிகளையும் வளைத்துப் பிடித்துக் கொண்டனர்!

உளவுத் துறையின் சென்னைக் கிளை தலைமை அதிகாரி விஸ்வம் தலைமையில் வந்த படையில் கமிஷனர் அப்துல் காதரும், ஏசிபி தேவதேவனும் ஏனைய துடிப்பான போலீஸாரும் இருந்தனர்.

சேரிலிருந்து விடுதலையான சூர்யா, "எவ்




மதுரையில் சராசரியாக ஒரு மனிதனை இரவில் 10 கொசுக்கள் கடிப்பதாகவும் அதனால் மதுரையில் வாழும் மக்கள் ஓர் இரவில் மட்டும் ஐம்பது லிட்டர் இரத்தத்தை இழப்பதாகவும் பூச்சிகளைப் பற்றி ஆராயும் துறையினர் அண்மையில் கண்டறிந்துள்ளனர்.

- கோவீ. இராஜேந்திரன்

ஆதாரம் : ஹிந்து

---

வளவு தாமதம்? பொசுக்கென்று என்னைச் சுட்டிருப்பார்கள்!"

"அப்படி விடுவோமா? நாங்கள்தான் உன் ஷிப்டாகக் கவனித்துக் கொண்டிருந்தோமே!" என்று விஸ்வம் கண் சிமிட்டினார்.

மாலிக்கும் குறுந்தாடியும் அதிர்ச்சியுடன் கை விலங்கை வெறிக்க, 'கங்கா' நம்ப முடியாமல் சூர்யாவைப் பார்த்தாள்.

"இந்திய இன்டலிஜென்ஸை எவ்வளவு எளிதாக எடுத்துக் கொண்டிருக்கிறாய் கங்கா!"

சிரித்துவிட்டு சூர்யா அவளிடமிருந்து அந்த மைக்ரோ ஃபிலிமை திரும்பக் கவர்ந்து கொண்டான்.

கமிஷ்னர் அப்துல், "என்ன அது?"

அவரைப் பொருள் பொதியப் பார்த்து மௌனமாகப் புன்னகைத்தான் சூர்யா.

ஏதோ தேச ரகசியம் என்பதைப் புரிந்து கொண்ட கமிஷர், "ஓகே சார். உங்கள் தலைமை, ப்ரஸ்ஸுக்குத் தரும் தகவலுக்கு ஜம்மென்று தலையாட்டி வைக்கிறேன்!"

அவளைத் தீர்க்கமாகப் பார்த்த சூர்யா, "நீ போலி என்பதை ஆரம்பத்திலேயே கண்டுபிடித்து விட்டேன் பெண்ணே!"

எப்படி என்பது போலப் பார்த்தாள்.

"ஒரு தேர்ந்த உளவாளிக்கு அனேக விஷயங்கள் தெரிந்திருக்க வேண்டும். அன்று இந்தத் தடியன் தப்பிக்க ஏதுவாக 'மயக்கமாகிச்' சரிந்த உன்னை நான் தாங்கிப் பிடித்தது நினைவிருக்கிறதா? மயக்கமாக நன்றாகவே நடித்தாய்! ஆனால் உன் பல்ஸ்தான் காண்பித்துக் கொடுத்து விட்டது!"

'கங்கா' பிரமிப்புடன் பார்த்தாள்.

"ஆம் மிஸ் நூரு! உன்னைத் தாங்கிக் கொண்ட போது மிக இயல்பாக என் விரல்கள் உன் நாடி பிடித்து நுணுக்கமாகக் கவனித்

தது. ராக் ஸ்டெடி பல்ஸ்! ஒரு பெண்ணுக்குக் கற்பழிப்பு முயற்சி எவ்வளவு பெரிய கொடுமை. அந்தக் கடும் அதிர்ச்சியில் மயக்க முறும் ஒருவளுக்கு துளி லயம் பிறழாத மிக உறுதியான, நார்மல் நாடி துடித்தது என் சந்தேகத்தைக் கிளறியது! உனக்கு அம்னீஷியா என்று சொன்ன அந்த டாக்டர் மாணிக்க வேலு மேல் கூட சந்தேகம் இருக்கிறது. அனேகமாக அவன் பாகிஸ்தான் உளவு ஊழியர் ஊதியப் பட்டியலில் இருந்தாலும் ஆச்சரியப்பட மாட்டேன். பிற்பாடு அவனை 'உரசிப்' பார்க்க இருக்கிறேன்..."

தேவதேவன், "அங்கே கிட்னி மாற்று ராக்கெட் நடப்பதாக அரசல் புரசலாகத் தகவல் சார்!"

சூர்யா தொடர்ந்து, "நீ போலி என்பது புரிந்ததும், இந்த விளையாட்டைக் கடைசி வரை ஆட முடிவு செய்தேன். நீ யார், எந்த நாடு, கூட்டாளிகள் யார், எதுவரை செல்வாய் எல்லாம் அறிய விரும்பி, கூண்டோடு பிடிக்க வலுவில் வலையில் விழுந்தேன்! உனக்கு ஒன்று தெரியுமா கங்கா? நேராக ஏமாற்றுவதை விட ஏமாந்ததாக நடிப்பதில் தான் 'கிக்' அதிகம்!"

சூர்யா ரசித்துச் சிரித்துவிட்டு, "எஸ்பியானேஜில் நீ ஒரு சிறு பாப்பா! உளவு உலகில் பஞ்சமா துரோகங்களும், நரித்தனமான ஏமாற்றல்களும் சர்வ சாதாரணம் டார்லிங்! நீங்கள் மூவரும் பிடிபட கங்காதான் காரணம்!"

"என்ன சொல்கிறாய்?" கேட்ட அவள் முகத்தில் கோபம்; சந்தேகம்; அவமானம்.

"நீ காதல் 'செய்து' என்னை மடக்கினாய். தவறு- மடக்கியதாக நினைத்தாய்! அதே காதல் காரணமாகத்தான் உன் கூட்டம் சிக்கியது. நான் கொடுத்த காதல் பரிசை நீ சரியாகப் பார்க்கவில்லை போல! அந்தத் தங்கச் சங்கிலியில் லாக்கெட்டைத் திறந்து பார்."

ஒரு போலீஸ் அதிகாரி அவள் அணிந்திருந்த செயினைக் கழட்டி சூர்யாவிடம் தந்தார். அதன் லாக்கெட்டை ஒரு மாதிரி பக்கவாட்டில் வைத்துத் தட்டினான்.

இரண்டாகப் பிளந்து, திறந்து கொண்ட லாக்கெட்டினுள் ஒரு சிறிய அதிசென்சிடிவ் மைக்!

அதை எடுத்து அவளிடம் கொடுத்துவிட்டு, "என் காதல் பரிசு பார்! செவ்வனே செயல்பட்டு விஸ்வம் வளைத்துக் கொள்ள உதவிய மைக்கிற்கு வந்தனம்! இன்னும் குறிப்பாகச் சொல்வதானால் நீங்கள் மூவரும் பிடிபட உங்கள் பாகிஸ்தான் தான் காரணம்!" என்றான் நமுட்டுச் சிரிப்புடன்.

மூன்று பாகிஸ்தான் உளவாளிகளும் உச்ச அதிர்ச்சியுடன் பார்த்தார்கள்.

"ஆம் நாகு என்கிற கங்காவே! அந்த மைக்கின் பின்புறம் பார். அதன் தயாரிப்பு எழுத்துக்களை உரத்துப் படி!"

வாய் விட்டுப் படித்தான்:

"மேட் இன் பாகிஸ்தான்!"

"எப்படி? வித்தியாசமாயில்லை?

(முற்றும்)

---

துன்பத்தை அனுபவித்த காலத்தை மறந்து விடு; ஆனால், அது உனக்கு விட்டுச் சென்ற பாடத்தை மட்டும் மறக்காதே.

— அல்பேனியப் பழமொழி

— பா. குணா

துன்பப் பறவைகள் உங்கள் தலை மேல் வட்டமிடுவதைத் தவிர்க்க முடியாது. ஆனால் உங்கள் தலையிலே கூடு கட்டாதபடி தடுத்துக் கொள்ள முடியும்.

— சீனப் பழமொழி

— பா. குணா

மாறுதல்கள் எல்லாம் இயல்பானவை என்று அமைதியாகவும் இன்முகத்துடனும் ஏற்றுக் கொள்ளத் தயாராக இருத்தல் வேண்டும். ரயிலில் பிரயாணம் செய்யும் போது காட்சிகள் மாறா விட்டால் ரயில் நின்று விட்டிருப்பதைக் காண்பீர்கள். மாறுதல் இன்றேல் வாழ்வில்லை.

— சின்மயானந்தர்/

மௌனிகா சாந்தன்

# பெரிய பெரிய ஆசை!

முதல்வர் வரும் ரோட்டில்
சைக்கிள் விட ஆசை
காலில் விழுந்திடாத
மினிஸ்டர் ஆக ஆசை

கவர்னரோடு முதல்வர்
கை குலுக்க ஆசை
ராவோடு கொஞ்சம்
சிரித்துப் பேச ஆசை

விசிலின்றி முதல் நாள்
ரஜினி படம் ஆசை

உயிரோடு வீரப்பன்
சரணடைய ஆசை

பல்லவனில் படுத்து
பவனி வர ஆசை
நல்லவனாய்ப் பிடித்து
வீட்டில் குடிவைக்க ஆசை

கடன்காரர் வந்தால்
உடனே பறந்துவிட ஆசை
புடைவை நகை கேட்க
மனைவி மறந்துவிட ஆசை

மகனுக்கு மெடிக்கல் சீட்
மெரிட்டில் வர ஆசை
புது ஆண்டில் விலைகள்
விழுந்துவிட ஆசை!

— வசீகரன்



## சென்னையில் எளிய தவ

காசி குரூப் ஹவுசிங் பெனிபிட் ஸ்கீம்: திட்டத்தில் மாத மூலம் 300 முதல் 1000 சதுரடி வரையிலான வீட்டனை தேர் செலுத்தலாம். இத்திட்டத்தில் 30.03.95–க்குள் வீடு பதிவு செய் வழங்கப்படும். இத்திட்டத்தில் மேலும் சில புதிய குரூப்புகள் ஆரம் டுள்ள அட்டவணையில் விரிவாக தந்துள்ளோம்.

| மொத்த நபர் 25 | | மொத்த நபர் 25 | |
|---|---|---|---|
| தவணைத் தொகை | மாதங்கள் | தவணைத் தொகை | மாதங்கள் |
| (4 மாதத்திற்கு ஒரு முறை குலுக்கல்) | | (2 மாதத்திற்கு ஒரு முறை குலுக்கல்) | |
| ரூ. 1,500 | 100 | ரூ. 3,000 | 50 |
| ரூ. 1,750 | 100 | ரூ. 3,500 | 50 |
| ரூ. 2,000 | 100 | ரூ. 4,000 | 50 |
| ரூ. 2,250 | 100 | ரூ. 4,500 | 50 |
| ரூ. 2,500 | 100 | ரூ. 5,000 | 50 |
| ரூ. 2,750 | 100 | ரூ. 5,500 | 50 |
| ரூ. 3,000 | 100 | ரூ. 6,000 | 50 |
| ரூ. 3,500 | 100 | ரூ. 7,000 | 50 |
| ரூ. 4,000 | 100 | ரூ. 8,000 | 50 |
| ரூ. 4,500 | 100 | ரூ. 9,000 | 50 |
| ரூ. 5,000 | 100 | ரூ. 10,000 | 50 |

இத்திட்டத்தின் கீழ் வீடுகள் கிடைக்கும் இடங்கள்: சென்னை காலனி போன்ற இடங்களில் மட்டுமே வீடுகள் ஒதுக்கீடு செய்யப் பிரதான இடங்களான மயிலாப்பூர், பெசன்ட்நகர், அடையாறு, கோடம் வேளச்சேரி, தி.நகர், இராஜா அண்ணாமலைபுரம், திருவெற்றியூர் இடத்திற்கு தகுந்தாற்போன்ற விலை பட்டியல் உள்ள குருப்புகளில் பெறலாம்.

மேலும் வி

**காசி பி**

மர்

**காசி ஹவுசிங் & டெ**

காசி தியேட்டர் காம்ப்ளெக்ஸ்,

அசோக் நகர்,

போன்: 4821969, 4822206,

கிளை அலுவலகம்: நெ.13, கிழக்கு ஜோன்ஸ் ரோடு,

ஞாயிறு மு

## ணை முறையில் சொந்த வீடு

தவணையாக ரூ.1,500/- முதல் ரூ.5,000/- வரை செலுத்தி குலுக்கல் தெடுத்து குடியேறலாம். மீதமுள்ள தொகையை அதே தவணைகளாக பவர்களுக்கு 10% ரொக்கத் தள்ளுபடி (CASH DISCOUNT) பிக்கப்பட்டுள்ளன. அதற்கான முழு விபரமும் கீழே கொடுக்கப்பட்

| மொத்த நபர் 25 தவணைத் தொகை (மாதம் ஒரு முறை குலுக்கல்) | மாதங்கள் | வீட்டின் மதிப்பு ரூபாய் (லட்சங்களில்) | சதுர அடி |
|---|---|---|---|
| ரூ. 6,000 | 25 | 1 . 5 | 300 |
| ரூ. 7,000 | 25 | 1 . 7 | 350 |
| ரூ. 8,000 | 25 | 2 . 0 | 400 |
| ரூ. 9,000 | 25 | 2 . 2 | 450 |
| ரூ. 10,000 | 25 | 2 . 5 | 500 |
| ரூ. 11,000 | 25 | 2 . 7 | 550 |
| ரூ. 12.000 | 25 | 3 . 0 | 600 |
| ரூ. 14,000 | 25 | 3 . 5 | 700 |
| ரூ. 16,000 | 25 | 4 . 0 | 800 |
| ரூ. 18,000 | 25 | 4 . 5 | 900 |
| ரூ. 20,000 | 25 | 5 . 0 | 1000 |

க.கே. நகர் (மேற்கு), விருகம்பாக்கம், சாலிகிராமம், வடபழனி, குமரன் ட்டுள்ளன. ஆனால் இனிவரும் காலங்களில் சென்னை மாநகரில் ாக்கம், அசோக் நகர், திருவான்மியூர், மொகப்பேர், ட்ரஸ்ட்புரம், பான்ற இடங்களிலும் வீடுகள் ஒதுக்கீடு செய்யப்பட உள்ளன. சார்ந்து மேற்கண்ட இடங்களிலும் மாதத் தவணைகள் மூலம் வீடுகள்

ரங்களுக்கு

**ீடர்ஸ்**

ும்

**லப்மெண்ட் லிமிடெட்**

1, 92, ஜவஹர்லால் நேரு சாலை,
சன்னை - 600 083.

**825606, 4825506, FAX: 044- 4822206**

ீசதாப்பேட்டை, சென்னை – 600 015, போன்: 456464

லு வலகம் உண்டு








பஸ்ஸில் ஏகப்பட்ட கூட்டம். சீருடை அணிந்த ஒருவர் ஏறி, கூட்ட நெரிசலில் மாட்டிக் கொள்ளாமல் டிரைவர் பக்கத்தில் நின்று கொண்டார்.

அந்த நேரத்தில் நல்ல போதையுடன் ஓர் ஆசாமி பஸ்ஸில் ஏறி டிரைவர் பக்கத்தில் நின்றவரிடம் போய் சட்டையைப் பிடித்து, 'எனக்கு ஒரு டிக்கெட் கொடு' என்றார். "நான் கண்டக்டர் இல்லை. விமான அதிகாரி" என அவர் சொல்ல, "டிரைவர் நிறுத்து! நிறுத்து! தவறிப் போய் விமானத்தில் ஏறிவிட்டேன். எனக்கு பஸ்ஸில்தான் போகணும்!" என்றார் குடிகாரர்.

- செ. மதிவாணன்

ரிசர்வ் வங்கியில் தனி நபர் கணக்கு வைத்துக் கொள்ளலாமா?

வைத்துக் கொள்ளலாம். குறைந்த பட்சம் ஒரு லட்ச ரூபாய் இருப்பு இருக்க வேண்டும். எடுப்பதும் போடுவதும் லட்சத்தில்தான் இருக்க வேண்டும். வட்டி கிடையாது. யார்தான் இப்படி ஒரு கணக்கு வைத்துக் கொள்வார்கள்? ரிசர்வ் வங்கியின் முதல் கவர்னரான சி.டி. தேஷ்முக் 1949 இல் ஒரு லட்ச ரூபாய் போட்டு கணக்குத் துவங்கினார். 1989 இல் அந்தக் கணக்கு மூடப்பட்டது. நாற்பது வருடத்திற்கு வட்டி கணக்கிட்டுப் பாருங்கள்!

- கலாமூர்த்தி

• தேஷ்முக்





வங்காள முதல் மந்திரி ஜோதிபாசு இன்னும் சினிமா காமிராவுக்குப் 'போஸ்' கொடுக்கவில்லை. ஆனால், அவரது மருமகன் டாலிபாஸு, 'அதிகார்' என்ற வங்கமொழிப் படத்தில் நடித்து விட்டார். இந்தியாவில் பெண்களுக்கு இழைக்கப்படும் கொடுமைகளை அந்த டாக்குமெண்டரிப் படம் வெளிச்சம் போட்டுக் காட்டுகிறது. ஜோதிபாசுவின் பேத்தியும் சளைத்தவர் அல்ல. அமலும், ரிதுபர்னா கோசும் இணைந்து தயாரிக்கும் ஒரு வங்கமொழிப் படத்தில் பேத்தி முக்கிய பாத்திரம் ஒன்றில் நடிக்கிறார். திரிபுரா மாநிலத்தில் சுகுமார் பர்மன் என்று ஓர் அமைச்சர். அவர் 'தோன்கார்' என்ற படத்தில் ஒரு மீனவராக நடித்து வருகிறார்.

ஆதாரம் : 'வீக்'
தகவல் : சேலம் சக்திக்கொடி



வரதட்சிணைக் கொடுமை பற்றிப் பல கதைகள் படித்திருக்கிறோம். அவற்றுள் இது ஒரு விசித்திரமான கதை! சென்னைப் பெருநகரை அடுத்த 'புழல்' என்ற ஊரைச் சேர்ந்தவர் சீதா. அவர் ஒரு வழக்குத் தொடுத்திருக்கிறார், கடத்தப்பட்ட தமது கணவனை மீட்டுத் தரும்படி. திருமணமாகி பதினோரு மாதங்கள்தான் ஆகிறது. சீதாவின் மாமனார் ஆறுமுகம் தமக்குப் பதினைந்து பவுன் வரதட்சணையாகத் தந்தால்தான் மகன் உமா சங்கரை விடுவிப்பேன் என்கிறாராம்!

– எஸ். வி. நாதன்



ஞ்சாபில் அமிர்தஸர் நகரில் பல டாக்டர்களின் 'கன்ஸல்டிங் ஃபீஸ்' எவ்வளவு தெரியுமா? ரூ. 2,000 முதல் ரூ. 5,000+ வரை! இந்த டாக்டர்கள் ஒரு விஷயத்தில் 'ஸ்பெஷலிஸ்டுகள்'! இவர்களிடம் அடிதடி வழக்குகளில் மாட்டிக் கொண்ட குண்டர்கள் வருவார்கள். டாக்டர்கள் இவர்களுக்குச் செயற்கையான காயங்களை உடலில் ஏற்படுத்துவார்கள்! தாங்கள்தான் அடிதடியில் அடிபட்டவர்கள் என குண்டர்கள் கோர்ட்டில் காட்ட இந்தச் 'செயற்கை காய' ஏற்பாடு! இதற்குச் சில போலீஸ் அதிகாரிகள், மருத்துவமனை ஊழியர்கள் உடந்தையாக இருக்கிறார்களாம்!

ஆதாரம் : 'வீக்'

தகவல் : எஸ். ஆலன்





மது மாநிலத்திலிருந்து வந்த ஒரு பத்திரிகையாளர் அரசு விடுதியில் தங்க ஏற்பாடு செய்தார், அந்த முன்னாள் மத்திய மந்திரி. மூன்று மாதங்கள் டில்லியில் தங்கிய அந்தப் பத்திரிகையாளர் விடுதியின் வாடகைப் பணத்தைக் கொடுக்காமலேயே கம்பி நீட்டினார்.

அந்த மந்திரி ராஜினாமா செய்தவுடன் மத்திய அரசு ஏழாயிரத்து எண்ணூறு ரூபாய்க்கு வாடகைக்கான பில்லை அனுப்பியது. நேர்மைக்கு எடுத்துக்காட்டாக விளங்கும் அவர் தமது சொந்தப் பணத்திலிருந்து அந்த பில்லைக் கட்டினார். அவருடைய வங்கிக் கணக்கில் அந்த பில் பணம் போக மீதமிருந்த தொகை எவ்வளவு தெரியுமா? ரூபாய் முந்நூற்றுப் பதினெட்டு தான்!

அந்த நபர் - ஏ. கே. அந்தோணி!

ஆதாரம் : 'இந்தியன் எக்ஸ்பிரஸ்'

தகவல் : என். பங்கஜம்







லகத்தின் மிகப் பெரும் பணக்காரரான புருணெய் சுல்தான் ஹஸன் அல்-போல்கியாவின் சொத்து மதிப்பு என்ன தெரியுமா? 37 பில்லியன் டாலர்கள். 37 க்குப் பக்கத்தில் ஒன்பது ஸைபர் போட்டுக் கொள்ளுங்கள் போதும். அதுசரி; அவருடைய முழுப்பெயர் என்ன தெரியுமா? ஒரு முறை மூச்சை நன்றாக இழுத்து விட்டுக்கொண்டு படியுங்கள் : துல்யங் மஹா மூலியா பதூகா செரீ பகிந்தா சுல்தான் யாங்-டி-பெர்த்துவான் நெகரி புருணெய் அவாங் மூடா ஹஸன்-அல்-போல்கியா முஇஜ்ஜதீன் வத்தௌலா இப்னி தூலி யங் தொராமத் மூலியா பதூகா செரீ பெகாவன் சுல்தான் அவாங் மூடா ஓமர் அலி ஸைஃபுத்தீன் சஅதுல் கைரி வத்தீன்...

- சாதிக் அப்துல் ஹமீத்



# நினைவலைகள்

36



THE HAPPIEST WIFE IS NOT THE ONE WHO MARRIES THE BEST MAN; SHE IS THE ONE WHO MAKES THE BEST MAN OF THE ONE SHE MARRIED.

— SIR NOEL BOWADER

இந்த அத்தியாயத்தில் சற்று personal ஆக நான் எழுதவிருக்கிறேன் என்பதற்காக வாசகர்கள் சற்று மன்னிக்க வேண்டும். இரண்டு மாதங்களுக்கு முன்பு, ஒரு திருமண வரவேற்பு நிகழ்ச்சியின் போது கவிஞர் வாலி அவர்களைச் சந்தித்தேன். அவர் காரில் ஏறப் போக, நான் காரிலிருந்து இறங்க, சந்தித்த இடத்திலேயே ஏறத்தாழ 35 நிமிடங்கள் நின்று கொண்டே பேசிக் கொண்டிருந்தோம்.

எங்கள் உரையாடலின் பெரும் பகுதியை வாலி ஆக்கிரமித்துக் கொண்டார்.

"SUN TV யில் அவர் பார்த்த எனது மனைவியின் பேட்டியைப் பற்றி சொல்லிச் சொல்லி மாய்ந்து போனார். அவர் சொன்னார்:

"என் மனைவியும் நானும் இந்தப் பேட்டியைப் பார்த்துப் புல்லரித்துப் போனோம். காரணம், சற்றும் பதற்றமில்லாமல், கொஞ்சமும் கர்வமில்லாமல், என்னளவும் 'பந்தா' இல்லாமல் மிக மிகச் சாதாரண வார்த்தைகளைச் சொல்லி தனது கருத்துக்களையும் பதித்த அவரது பேட்டி எங்களை மிகவும் கவர்ந்து விட்டது—

"இதைப் பற்றி நான் உமக்கு 'புதுக் கவிதை'யாக ஒரு கடிதம் எழுதியிருக்கிறேன். அது நாளைக்கு உங்களுக்குக் கிடைக்கலாம். 'புதிய பார்வை' பத்திரிகையில் நான் தொடராக எழுதும் கட்டுரையிலும் இந்த SUN TV பேட்டி பற்றி குறிப்பிட்டிருக்கேன்."

அவர் எழுதியிருந்த கவிதைக் கடிதத்திலிருந்து ஒரு பகுதி இதோ :

"ஒரு விஷயம் -
நான்
உரைக்க விரும்புகிறேன்.
இது
உயர்வு நவிற்சியாக
இருக்கலாம்;
இருப்பினும்
ஓரிதினல் உண்மை இது!
படக் கருவோ....
புது முகமோ....
உன் கைக்கு
"RAW" வாகத்தான்
வருகிறது
பின் உன் கை வண்ணத்தில்
அது 'GEM' ஆகிறது.
காரணம்....
உன்
ராஜ்ஜியத்தின்
பட்டத்தரசியின் பெயர்
'ராஜம்' என்று
இருப்பதுதான்!
ஃ ஃ ஃ
உன் மனைவி
உன்னை
சாவின் கையிலிருந்து
மீட்ட
சாவித்திரி!
உன்னை
எமன்
நெருங்காமல் காத்த
Woman!
ஒரு
குடும்ப ஸ்திரி
கொள்ள வேண்டிய
குண நலன்களான -
சர்வத்தையும் கற்ற
உன்
சம்சாரம்....
கர்வத்தை மட்டும்
கற்காமலே விட்டாள்!
புகழும் -
பொருளும் -
ஒரு பெண்ணை

• ராஜம் பாலசந்தர் ;

கே. பாலசந்தர்



# நெஞ்சை அள்ளும் தஞ்சை!

தஞ்சை மாவட்ட வாசகர்களே! தமிழென ஒரு செய்தி. கோவையை அடுத்து உங்கள் மாவட்ட படைப்புகளுக்குத்தான் பிரத்யேகமாய் இடம் அளிக்கப் போகிறோம். கல்கியின் 'நெஞ்சை அள்ளும் தஞ்சை' பகுதியில் இடம்பிடிக்க உங்கள் படைப்புகளை அனுப்புங்கள்.

விதிகள் மிக எளிமையானவை :

- இப்போது தஞ்சை மாவட்டத்தில் வசிப்பவர்கள் மட்டுமே எழுதலாம்.
- எழுதும் விஷயங்கள், ஜோக், துணுக்கு, உண்மைச் சம்பவம், புது/மரபுக் கவிதை, மாணவர் நியூஸ், என எதுவாயினும் போஸ்ட் கார்டில் மட்டுமே எழுதலாம்.
- பளிரென்று கவர்ந்திழுக்கும் வண்ணமாக உங்கள் படைப்பு அமைய வேண்டும்.
- கல்கி ஆசிரியர் குழுவினர் தேர்ந்தெடுக்கும் தஞ்சை மாவட்டப் படைப்புகள் 'நெஞ்சை அள்ளும் தஞ்சை' பகுதியில் இடம்பெறும்.
- பிரசுரமாகும் படைப்புகளுக்குச் சன்மானம் உண்டு.
- உங்கள் படைப்புகளின் தரத்தைப் பொறுத்து அதிகபட்சமாக நான்கு வாரங்கள் வரை இப் பகுதி தொடர்ந்து வெளியாகும்.
- தலைசிறந்த படைப்புக்குச் சிறப்புப் பரிசு உண்டு. ஆசிரியர் தீர்ப்பே இறுதி.
- ஒருவர் எத்தனை படைப்புகள் வேண்டுமானாலும் அனுப்பலாம். போஸ்ட் கார்டு முகவரிப் பகுதியில் 'நெஞ்சை அள்ளும் தஞ்சை' என்று குறிப்பிடவும்.
- தஞ்சை பக்கங்களில் இடம் பிடிக்க முந்திக் கொள்ளுங்கள்!

மற்ற மாவட்ட வாசகர்கள் இப்போதே யோசிக்கத் தொடங்கலாமே!

— ஆசிரியர்



போதை நிலைக்கு ஏற்றும்;
அவை இரண்டும்
உன்
அருமை மனைவியை
சீதை நிலைக்கு
ஏற்றியிருக்கிறது!

வாலி அவர்களின் கடிதத்தை என் மகள் புஷ்பா கந்தசாமியிடம் காட்டினேன். அவள் கண்கள் பனித்தன; அவள் சொன்னாள்:

"நானும் 'புதிய பார்வை' யில் வாலி அவர்கள் எழுதியிருந்ததைப் படித்துவிட்டு அவருக்கு ஒரு நன்றிக் கடிதம் எழுதியிருந்தேன்....

"30 ஆண்டு காலமாகப் பழகியிருக்கிறோம். இதுவரை எங்கள் கண்களுக்குப் புலப்படாத என் தாயின் நற்பண்புகள் முப்பதே நிமிட டீ.வி. பேட்டியிலிருந்து உங்கள் கண்களுக்குப் புலப்பட்டிருக்கிறது."

இதே எண்ணம்தான் எனக்கும் தோன்றியது.

சிந்தித்துப் பார்க்கிறேன்.

தஞ்சை மாவட்டத்தின் நன்னிலத்திலிருந்த என்னையும் பல மைல்களுக்கப்பால் மேற்குத் தொடர்ச்சி மலையைக் கடந்து வாழ்ந்த (அந்நாளில் அது பெரிய தொலைவுதான்) திருவனந்தபுரத்துக்காரியையும் திருமணம் ஒன்று சேர்த்தது.

"பார்ப்பதற்கு குமாரி கமலா மாதிரி இருக்கிறாள்" என்று எனது அண்ணனால் சிபாரிசு செய்யப்பட்டு, 'வெட வெட' வென்றிருந்த நான், அவளை மணம் செய்து கொண்டபோது "இவன் பெரிய ஆளாய் வருவான்" என்று எவரும் கிஞ்சித்தும் நினைப்பதற்கான சாத்தியக் கூறுகள் சத்தியமாய் அப்போதில்லை!

பேச்சுத் தமிழ் கூட மாறுபட்டு இருந்த மண்ணிலிருந்து வந்தவள், தஞ்சை மண்ணை புகுந்த இடமாக ஆக்கிக் கொண்டவள், எப்படி மூன்று நான்கு மாதங்களுக்குள்ளாகவே தன்னை முழு தஞ்சாவூர்க்காரி ஆக்கிக் கொண்டாள் என்கிற ஆச்சர்யம் எனக்கு இப்போதும் உண்டு.

புகுந்த வீட்டிற்கு வந்த சில நாட்களுக்குள் நடந்தது இந்தச் சம்பவம்.

ஆம்! எங்கள் கிராமத்து வீட்டிற்கு வந்த ஒரு பெரியவரை "வாரும்! வந்து உட்காரும்" என்று திருவனந்தபுர பாணியில் இவள் சொல்லிவிட, அடுத்த இரண்டு நாட்கள் இந்தச் சம்பவம் எங்கள் வீட்டில் பெரிய புயலையே கிளப்பி விட்டது. வீட்டிற்குப் புதிதாக வந்திருக்கும் மருமகளுக்கு எப்படிப்

**சந்தோஷம்**

## ஓங்கார ஆஸ்ரமம்

## சித்ரா பௌர்ணமியில் வெட்டவெளி தியானம்

### உங்களுக்காக,
### உங்கள் சந்தோஷத்திற்காக,
### உங்கள் நிம்மதிக்காக,
### உங்கள் நீண்ட ஆயுளுக்காக,
### உங்கள் வம்சத்தினருக்காக

இந்தப் பூவுலகில் பேரமைதிக்காக பரப்பிரம்ம சற்குரு மயிலாடுதுறை ஓம் ஸ்ரீ சித்தர் சுவாமிகளின் ஆக்ஞைப்படி ஓங்கார ஆஸ்ரமம் வரும் 14.05.1995 ஞாயிறு அன்று மாலை ஏழு மணிக்கு பாண்டிச்சேரி கடற்கரை காந்தி மைதானத்தில் 24-வது ஓங்கார வெட்டவெளி தியானம் நடத்த உள்ளது. சுவாமிகளின் ஆசியோடு உங்களை பங்கேற்க அன்போடு அழைக்கிறோம். ஓங்கார ஆஸ்ரமத் தலைவர் தவத்திரு சுவாமி ஓங்கார நந்தா அவர்கள் முன்னின்று நடத்துகிறார்கள். வர இயலாதவர்கள் தங்கள் இடத்திலேயே இரவு ஒன்பது மணி முதல் மூன்று மணி வரை சுத்த தியானம் செய்யவும்.

சந்தோஷம்.



பி. பாலசுப்ரமணியம், பி.எஸ்ஸி.,
மூத்த அறங்காவலர். கந்த கோட்டம்,
ஓங்கார ஆசிரமத்தின் தலைமை ஆலோசகர்,
மற்றும் ஆலோசகர், பார்க் டவுன்
பெனிபிட் பண்ட், சென்னை -3.

ஆசிகள்,
சுவாமி ஓங்காரநந்தா
தலைவர், ஓங்கார ஆசிரமம் பாண்டிச்சேரி.

> எத்தனை புயல்களை நீ சமாளித்துக் கடந்தாயென்பது முக்கியமல்ல; கப்பலை ஒழுங்காகக் கரை சேர்த்தாயா என்பதே!
>
> — வில்லியம் மீக்லி/பா. அச்சுதன்

பழக வேண்டுமென்கிற மரியாதையே தெரியவில்லையென்கிற சர்ச்சை பூதாகாரமாக உருவெடுத்து, திருவனந்தபுரத்துக் காரியை மருமகளாக அவசரப்பட்டு ஆக்கிக் கொண்டு விட்டோமோ என்று என் தாய் புலம்ப, 'இதில் என்ன தப்பு' என்று புரியாமல் என் மனைவி கண்ணீரோடு நிற்க....

'வாரும்' என்கிற சொல் திருவனந்தபுரத்தில் மிகவும் மரியாதையான சொல். அதுவே தஞ்சை மண்ணில் சற்று இரண்டாம் பட்சமான மரியாதைச் சொல்; 'வாருங்கள்' என்றோ, 'வாங்கோ' என்றோ சொல்வதுதான் தஞ்சைதரணியில் மரியாதை மிக்கதொரு சொல்.

இப்படிப்பட்ட சின்னச் சின்ன வட்டார வார்த்தைகள் சின்னச்சின்ன பூகம்பங்களை ஏற்படுத்தினாலும் ஒரு சின்னக் குடும்பத்தில் பெற்றோர்களுக்கு ஒரே மகளாகப் பிறந்த அவள், பெரிய குடும்பத்தில் புகுந்து மூன்று மாத காலத்திற்குள் சமாளிக்கக் கற்றுக் கொண்டதையும், புதிய மண்ணுக்கேற்ப தன்னை மாற்றிக் கொண்டதையும் நான் மெச்சிக் கொண்டதுண்டு; மனத்தளவில் தான். வெளியில் சொல்லிக் கொண்டதில்லை.

கடந்த 38 ஆண்டுகளாக அவள் சுமந்து கொண்ட பொறுப்புகள் ஏராளம். எல்லாவற்றுக்கும் என்னுடைய mouth piece ஆக பின்னணியில் இருந்து கொண்டு, அவள் பாகத்தை அவள் செவ்வனே நடத்தி வந்திருப்பதை நினைவுபடுத்திக் கொள்கின்ற ஒரு வாய்ப்பை, வாலி அவர்களின் கவிதைக் கடிதம் எனக்கும் ஏற்படுத்திக் கொடுத்தது.

**ஆ**ரம்ப காலத்தில் அலுவலகத்திலிருந்து திரும்பிய உடனே, நாடக ஒத்திகைக்கு நான் சைக்கிளில் கிளம்புவதைக் கண்டு சண்டை சச்சரவுகள் ஏற்பட்டதுண்டு.

சின்னச் சின்ன சந்தோஷங்களை அவள் விட்டுக் கொடுத்திருக்கிறாள். ஆரம்ப காலங்களில் நாங்கள் இருவரும் வெளியில் சென்றதில்லை. ஒரு பீச், ஒரு பார்க், செத்த காலேஜ், உயிர் காலேஜ் என்று எங்கேயும் சேர்ந்து சென்றதில்லை; குழந்தைகள் பிறந்த பிறகு அவர்களை அழைத்துக் கொண்டு குடும்பத்தோடு ஊர் சுற்றியதுமில்லை.

நாடக உலகத்தோடும், பின்னர் திரையுலகத்தோடும் ஐக்கியமாகிப் போயிருந்த என்னைச் சகித்துக் கொண்டுதான் வாழ்ந்திருக்கிறாள்.

வீட்டுப் பிரச்னைகளைப் பலவந்தமாக அவளது தோள் மீது ஏற்றி வைத்துவிட்டு, முன்னர் பயில்முறையாகவும் அதுவே பின்னர் தொழில் முறையாகவும் ஆகிவிட்ட என் கலைப் பயணத்தில் மட்டுமே நான் கவனம் செலுத்துகிற மாதிரி ஒரு வசதியை எனக்கு ஏற்படுத்திக் கொடுத்து எனக்கு உறுதுணையாக நின்ற என் மனைவியை இன்று நன்றியோடு நான் நினைவு கூர்கிறேன்.

**யா**ர் யாருக்கு எது பலமோ, அதை அவரவர்களிடமே விட்டுவிட வேண்டும் என்பது என் சித்தாந்தம். அவற்றைப் பற்றியெல்லாம் கவலைப்படாமலே இருப்பது என் பலவீனமென்றால், அவ்வப்பொழுது நச்சரித்து சில விஷயங்களைச் சாதித்துக் கொள்வது அவளுடைய பலம்.

குடும்பம், கணவன், குழந்தைகள் என்ற வட்டத்திற்குள்ளேயே சுழன்றால் போதுமென்ற மனோபவம் கொண்டவள். அநாவசியமான நண்பர் குழாம், வம்புப் பேச்சுகள், ஆடம்பரம், போலி கௌரவம் நகை ஆசைகள் இவையனைத்துமே அவளது அகராதியில் இடம் பெறுவதில்லை.

கணவன் எடுத்த திரைப்படம்தானே யென்று அதற்காக 'ஓகோ'வென்றெல்லாம் புகழ்வதில்லை. தனக்குப் பிடிக்கவில்லை யென்றால் "பிடிக்கவில்லை"தான். வழவழா கொழ கொழாவெல்லாம் கிடையாது.

என் வேலைகளில் தலையிடாமலும், அதே சமயம் எனக்கு அவ்வப்பொழுது அறிந்தோ அறியாமலோ inspire செய்து கொண்டுதான் இருக்கிறாள்.

நிரம்ப கவலைப்படும் ஒரு ரகம். பிரச்னைகளைப் பட்டியல் போட்டு தனக்குள்ளே கவலைப்பட்டுக் கொண்டிருப்பாள். ஆனால் இந்தக் கவலைகளுக்கெல்லாம் பின்னணியில் அமைந்திருப்பவை அவளுடைய பொறுப்புணர்ச்சியும் குடும்பத்தினரின் பேரில் உள்ள ஈடுபாடும் அக்கறையும் தான்.

அலங்காரம், அலங்கார வார்த்தைகள், அகங்காரமான எண்ணங்கள் - இவை என்னவென்றே தெரியாதவள், அக்கவுண்டண்ட் ஜெனரல் அலுவலக குமாஸ்தாவின் மனைவியாக இருந்த பொழுதும் சரி, பிரபலமான திரைப்பட இயக்குநரின் மனைவியாக இருக்கும் போதும் சரி, அவள் "அவளா' கவே இருக்கிறாள்.

WITHOUT A RICH HEART
WEALTH IS AN UGLY BEGGAR

(தொடரும்)

# கலகல கோவை



## நட்டு உண்டா?

‘**எ**னக்கு ஒரு நகை உண்டா? நட்டு உண்டா?’ எனப் பெண்கள் சொல்வர். நகை தெரியும்! நட்டு எது? கோவையில் கம்பன் விழா பட்டிமன்றத்தில் விளக்கம் சொன்னார் ஒரு புலவர். வளையல், சங்கிலி, நெக்லஸ், ஆரம், மெட்டி, மோதிரம் இவைதான் நகைகள் சரி... மூக்குத்தி, தோடு, கம்மல், கொலுசு என்ற ‘திருகாணி’ அமைந்த ‘நட்டு’ போல் திருகிவிடப்பட வேண்டிய நகைகளே ‘நட்டுக்’களாம்!

## உப்பு ஜவுளி!

**தி**ருமணத்துக்கு ஜவுளி எடுக்கப் போகும் போது, பெண் - மாப்பிள்ளை - இரு வீட்டாரின் உறவினர்களையும் அழைத்துப் போவது கோவையில் வழக்கம். துணிமணி வாங்குமுன் முதலில் உப்பு வாங்கி, விநாயகர் கோயிலில் வைத்துப் பூஜை செய்வார்கள். இரு வீட்டாரும் உப்புக் கூடைகளைப் பரிமாறிக் கொள்வர். பிறகே ஜவுளிக் கடைக்குள் நுழையலாம். இதை உப்பு ஜவுளி என்பார்கள்!

கோவை - 18, கே. வேங்கடேசன்.

## நீல்கிரிஸ் போகலாமா?.

பஹ்ரெயினிலிருந்து லீவுக்கு வந்திருந்த என் ஏழு வயதுப் பேரனிடம் ‘நீல்கிரிஸ் போகலாம் வரியா?’ என்று கேட்டேன். ரொம்ப உற்சாகமாகக் கிளம்பினான். உடை மாற்றிக் கொண்டு, பையில் ஸ்வெட்டர், கம்பளி எனத் திணித்துக் கொண்டு வந்தவனைப் பார்த்துச் சிரிப்பு வந்தது. நான் சொன்னதோ நீல்கிரிஸ் டிபார்ட்மென்டல் ஸ்டோர்ஸ்; அவன் நினைத்ததோ நீலகிரி மலைத் தொடர்! குழந்தையின் ஏமாற்றம் கடைக்குப் போய்ச் சக்கர வண்டியைத் தள்ளி பொருள்களை அடுக்க ஆரம்பித்ததும் மாயமாய் மறைந்து விட்டது!

கோவை - 2, விசாலம் நாராயணசுவாமி.

## தி.மு.க. ராசி

**1972** இல் கோவையில் நடந்த திமு.க.வின் பொதுக் குழுவில்தான் பிரச்னை உண்டாகி, பிறகு தி.மு.க. இரண்டாக உடைந்தது. அ.தி.மு.க. உருவானது.

1975 இறுதியில் தி.மு.க. ஆட்சியின் போது கோவையில் தி.மு.க. மாநாடு நடந்தது. பிறகு 76 இன் துவக்கத்தில் ஆட்சி கலைக்கப்பட்டது.

1989 இல் தி.மு.க. மறுபடி ஆட்சிக்கு வந்தது. ஆனால் பரிதாபம்! 1990 இல் கோவையில் நடந்த தி.மு.க. மாநாட்டுக்குப் பிறகு ஆட்சி கலைக்கப்பட்டது. கடைசியாக, கோவையில் கடந்த 1993 மார்ச்சில் நடைபெற்ற ‘இந்தி எதிர்ப்பு’ மாநாட்டிற்குப் பின் சில மாதங்களிலேயே கட்சி உடைந்து ம.தி.மு.க. உருவானது!

கோவை - 4, கே. ரகுபதி.

## அம்மா வருவாரா?

**தி**ருப்பூர் நகரில் வடக்கு, தெற்குப் பகுதிகளை இணைக்கும் இரயில்வே மேம்பாலம் கட்டுமானப் பணி முடிந்து தயாராக உள்ளது. ஆனால் முதல்வர் ஜெ.யின் தேதி கிடைக்காததால் திறப்பு விழா தாமதப்படுகிறது. ஜெ.யின் வருகையால் திருப்பூரே கலகலக்கப் போகிறதா? அல்லது விழாவை மேலும் ஒத்திவைத்து மக்களைக் கலக்கம் அடையச் செய்யப் போகிறார்களா?

திருப்பூர் - 2, என். ரவிச்சந்திரன்.

## தன்னம்பிக்கை மனிதர்

**கோ**வையில் "Sheetal Garments" என்று ஒரு கடை. அதில் பெண்களுக்கான

“ஏன்டா, காதல் தோல்வின்னு தாடி, மீசை எல்லாம் வளர்த்தே, இப்ப என்னடான்னா எல்லாத்தையும் எடுத்துட்டே? காதல் சக்சஸ்ஸா?”

“அட, ஏன்டா நீ வேறே! சாமியார்னு எல்லாரும் துரத்த ஆரம்பிச்சுட்டாங்க. அதுக்குப் பயந்துதான் எடுத்துட்டேன்!”

- கணபதி அகரம், சி. கிருஷ்ணபிரசாத்.





ஆடைகள் A to Z இருக்கின்றன. கடை முதலாளி உடல் ஊனமுற்ற ஒருவர். கை, கால் அனைத்தும் சூம்பிய நிலையில் தலை மட்டும் நார்மலாக, இரண்டே அடி உயரத்தில் இருப்பார் அவர். மற்றவர்கள் உதவி இல்லாமல் ஒரு வேலையும் செய்ய முடியாது. இருந்தாலும் கடை வைத்து, தன்னம்பிக்கையுடன் வெற்றி கண்டுள்ளார். பல பிரச்னைகள் காரணமாகச் சுயபச்சாதாபம் ஏற்படும்போது என் மனத்தில் 'வானமே எல்லை' படத்தில் வருபவரைப் போல் இவரையும் நினைத்துக் கொள்வேன். துன்பம் கரைந்துவிடும்.

கோவை - 1. மைதிலி ஸ்ரீநிவாஸ்.

## கும்பிடு

எங்கள் கிராமத்தில் சில வருடங்களுக்கு முன்பு ஒருவர் ஒவ்வொரு வீட்டிற்கும் தண்ணீர் எடுத்துக் கொடுத்துவிட்டு அவர்கள் கொடுப்பதை வாங்கிச் சாப்பிட்டுக் கொள்வாராம். சிறுவர் முதல் பெரியவர் வரை எதிரே யாரைக் கண்டாலும் கையெடுத்துக் கும்பிடும் பழக்கமும் அவரிடம் இருந்ததாம். அவரிடம் விபரீதமாக விளையாட ஆசைப்பட்டார் ஒருவர். அவர் தண்ணீர்க் குடங்களுடன் (தலையில் ஒன்றும், இடுப்பில் ஒன்றுமாக இரண்டுமே மண் குடங்கள்) வந்து கொண்டிருக்கையில் எதிரே சென்று அவரைப் பார்த்து ஒரு கும்பிடு போட்டுவிட, பதிலுக்கு அவரும் தண்ணீர்க் குடங்களை மறந்து கையெடுத்துக் கும்பிட, குடங்கள் விழுந்து சுக்குநூறாகிவிட்டன! இதைப் பார்த்தவர்கள் விழுந்து விழுந்து சிரித்திருக்கிறார்கள். அப்போது விபரீதமாக விளையாடிய நபர் வீட்டுக்குத்தான் தண்ணீர் கொண்டு போயிருக்கிறார் அவர். குடமும் அவருடையதுதான் என்பது தெரியவர, விளையாடிய நபர் சிரிப்பதைவிட்டு அழுவதுபோல் ஆகிவிட்டாராம்!

வடக்கனூர், கே.ஆர். வேலுச்சாமி.

## போவது எங்கே?

கோவையில் ஒன்-ஏ, ஒன்-பி, ஒன்-சி (1-A, 1-B, 1-C) ஆகிய நகரப் பேருந்துகள் எந்த ஊருக்குச் செல்கின்றன தெரியுமா? ஒன்-டி



## உருவம்

மனத்தைக்
கல்லாக்கி வைத்தேன்!
ஆனாலும்....
செதுக்கி செதுக்கி
உன் உருவைத்
தோற்றுவித்தன
உன் உளிக்
கண்கள்!

## சலசலப்பு

மரத்தைப் பற்றி
கிசுகிசுக்கின்றனவோ
உதிர்ந்த சருகுகள்!

பொள்ளாச்சி, பொ. பொன்ராஜ் குமார்.

## பராசக்தி பட்ஜெட்

லஞ்சத்தை ஒழித்துவிடு, பராசக்தி
லஞ்சத்தை ஒழித்துவிடு.
பஞ்சம் நீங்கிடவே பராசக்தி
படித்தோருக்கு வேலை கொடு
விஞ்சும் விலை உயர்வால்
அஞ்சும் ஏழை மக்கள்
பசிப்பிணி நீங்கிடவே பராசக்தி
பட்ஜெட் போட்டுவிடு!

அன்னூர், கே. ஆர். வேலுச்சாமி.



இத்தமிழ்ப் புத்தாண்டில்
ஆயிரமாயிரம் மக்களுக்கோர்

# இன்ப அதிர்ச்சி

**முக்குவியல்
பரிசு
விழா**

**சீட்டு சேகரிப்பு**

ஏப்ரல் 1 முதல் ஏப்ரல் 14 வரை

இன்ப அதிர்ச்சியைக் கண்டறிய சுல்பரி சிட்ஸில் ஓர் அங்கத்தினராகுங்கள். மீண்டும் ஓர் முறை சுல்பரி சிட்ஸ் அளிக்கும் சீட்டு சேமிப்புத் திட்டம் உங்களை மகிழ்ச்சியின் எல்லைக்கே கொண்டு செல்லும். சுல்பரியின் முக்குவியல் பரிசுவிழாவில் அங்கத்தினர்களுக்கும் அறிமுகம் செய்வோருக்கும் பாராட்டும் பரிசுகள் காத்திருக்கின்றன. மேலும் ஏப்ரல் 14-ம் தேதி அங்கத்தினராக சேருவோருக்கு மட்டும் ஓர் பம்பர் பரிசும் உண்டு.

போற்றத்தில் எங்கள் சேவையினால் அதிக பட்ச இலாபம் உங்களுக்கு நிச்சயம் உண்டு என சுல்பரி சிட்ஸ் உறுதியளிக்கிறது. அதுமட்டுமல்ல, செல்லவளியேயே, முதல் தவணையாக ஏதும் தொகையை, ஏலம் முடிந்தவுடனே கொண்டு செல்ல முடிவது சுல்பரியில் மட்டுமே. ஆம், எங்கள் வாடிக்கையாளர்களைத் திருப்தி செய்வது எங்கள் இலட்சியமே ஆகிவிட்டதல்லவா?

எனவே முந்துங்கள்! முக்குவியல் பரிசு விழா முடிவதற்குள் சுல்பரி சிட்ஸில் அங்கத்தினராகுங்கள்.

**சந்தாதாரர் சீட்டு குருப்புகள்**

| வ. எண் | சந்தா தொகை | காலம் | சீட்டின் மதிப்பு | அனுமதி தொகை | சந்தாதாரர் பரிசு | அறிமுகப்படுத்துவோர் பரிசு |
|---|---|---|---|---|---|---|
| 1 | 250 | 40 | 10,000 | 20 | லஞ்ச் பாக்ஸ் & | கட்டிங் டிஷ் |
| 2 | 500 | 30 | 15,000 | 30 | வாட்டர் பாட்டில் | (சிறியது) |
| 3 | 625 | 40 | 25,000 | 50 | ரைஸ் டிஷ் | S.S. டோப் |
| 4 | 1000 | 30 | 30,000 | 60 | (பெரியது) | (சிறியது) |
| 5 | 1000 | 50 | 50,000 | 100 | உருளி - காப்பர் | தாளிக்கும் கரண்டி |
| 6 | 1500 | 40 | 60,000 | 120 | பாட்டம் | (காப்பர் பாட்டம்) |
| 7 | 2500 | 30 | 75,000 | 150 | கோதாவரி குண்டு | "ப்ளோரா டிஷ்" |
| 8 | 3000 | 30 | 90,000 | 180 | (காப்பர் பாட்டம்) | |
| 9 | 4000 | 25 | 1,00,000 | 200 | S.S. டோப் செட் | "விட்வேர்" கடாய் |
| 10 | 5000 | 30 | 1,50,000 | 300 | காப்பர் பாட்டம் (4 Nos.) | |
| 11 | 8000 | 25 | 2,00,000 | 400 | S.S. Dinner Set (31 Pcs) | ப்ரை பான் (காப்பர் பாட்டம்) |
| 12 | 10000 | 50 | 5,00,000 | 1000 | 8 Gm. தங்க காசு | "Khoo Piyo" டிபின் பேக் |

**சந்தாதாரர் பரிசு**


1
2


3
4


5
6


7
8


11


12


9
10

**உச்ச வரம்பு ஏலம் 30% முன் அனுமதி பெறப்பட்டது.**




மர்ம பரிசுகள்

ESWARI

ECF ஈஸ்வரி சிட்பண்ட்ஸ் (பி) லிமிடெட்

தலைமை & நிர்வாக அலுவலகம்: 4, எல்டாம்ஸ் ரோடு, முதல் மாடி, ஆழ்வார்பேட்டை, சென்னை 600 018. தொலைபேசி: 455349, 459557, 457583.
கிளைகள்: பாரிமுனை ஃபோன்: 560767, தி.நகர் ஃபோன்: 8259661, புரசைவாக்கம் ஃபோன்: 5324937, 5324940, திருவல்லிக்கேணி ஃபோன்: 841187, நங்கநல்லூர் ஃபோன்: 2345891, சாலிகிராமம், ஃபோன்: 428650 குரோம்பேட்டை ஃபோன்: 405845 பாண்டிச்சேரி ஃபோன்: 31830

# உங்கள் வளர்ச்சி ஈஸ்வரியுடன் வளரட்டும்

எல்லா ஞாயிறு அன்றும் அலுவலகம் இயங்கும்.

LOTUS

(1-D) புதூருக்கு!
வேலாண்டிப்பாளையம், என். பிரபு.

## தண்ணியும் தந்தியும்

எங்கள் வீட்டிற்குச் சிறுவாணி குடிநீர் லாரி மூலம் வாரம் ஒரு முறைதான் வரும். எதிர்பாராவண்ணம் எனது அண்ணன் இரு நாள் வந்து போகவே குடிநீர் சேமிப்பு குறைந்தது. புதிதாகத் திருமணம் முடித்த எனது நாத்தியும் அவள் கணவரும் வருவதாகக் கடிதம் வந்தது. குடிநீர் வரும் நாள் இன்னும் இரண்டு தினங்கள் கழித்துதான்! என் கணவரை விட்டுத் தந்தி கொடுக்கச் செய்தேன் - இரு நாட்கள் தள்ளி வரச் சொல்லி! நேரில் விளக்கம் அளித்து அசடு வழிந்தேன்! என்று தீரும் இக்குடிநீர்த் தட்டுப்பாடு?
கோவை - 45, சுதாமதி.

## அவனுக்குப் பின்....

தீபாவளிக்குத் துணி எடுக்க இரு மகன்களையும் கடை வீதிக்கு அழைத்துப் போனோம். என் பெரிய மகன் எதைத் தேர்ந்தெடுத்தாலும் சிறியவன் அது 'நன்றாக இல்லை' என்று நிராகரித்துக் கொண்டிருந்தான். பார்த்துக் கொண்டே இருந்த கடைக்காரர், "தம்பி, உனக்குப் பிடித்ததை நீ எடுத்துக்கோ; அண்ணன் அவனுக்குப் பிடித்ததை எடுத்துக்குவான்" என்றார். "அண்ணா எடுக்கிற துணி, அவனுக்குச் சின்னதான பிறகு நான்தானே உடுத்தணும்?" என்று சின்னவன் பதில் சொல்ல, கடையில் சிரிப்பு அடங்கச் சில நிமிடங்கள் ஆனது!
தைடயம்பாளையம், சந்திரா ராஜகோபால்.






## சிறகு முளைக்கும்!

பனிபடர்ந்த பசும்புல் வெளியில்
பிள்ளையின் பிஞ்சுவிரல் பிடித்துப்
பாதம் சிலிர்க்க நடந்ததுண்டா?

கும்மாளி கொட்டிக் கொட்டமடிக்கும்
குட்டிப்பயல் சுட்டித்தனத்தில்
கவலை விட்டுப் பறந்ததுண்டா?

வாசல் நிறைய வண்ணக்கோலம்
வரைந்து திரும்பும் துணைமயிலை
வாரியணைத்து மெய்மறந்ததுண்டா?

மனம் கொஞ்ச மஞ்சத்தில் மனையவள்
மலர்க்கூந்தலில் முகம் புதைத்து
மனம் நெகிழ மகிழ்ந்ததுண்டா?
இவையெலாம் உணரத் தவிக்கும்
இளநெஞ்சம் உண்டென்றால்
இருசிறகு முளைக்கும் இன்றே!

கோவை - 4, கமலக்கண்ணன்.



## சோகம் போதுமே!

"இளைஞனே!
படிப்பதாக பாவனை செய்து
படம் பார்த்தது போதும்.
காதல் என்று சொல்லி
காமம் துய்த்தது போதும்.
வேலையில்லை என்று சொல்லி -
வெட்டியாகச் சுற்றியது போதும்.
ரசிகன் என்று சொல்லி
போஸ்டர் ஒட்டியது போதும்.
தோல்வி என்று நினைத்து
தாடி வளர்த்தது போதும்.
இனியாவது திரும்பிப் பார் -
வாய்ப்புகள் பல வந்து,
வாசல் கதவைத் தட்டுகின்ற
சப்தம் கேட்கவில்லையா?

மயிலம்பட்டி, தங்கபாரதி.

**OM SRI MAHAGANAPATHAYE NAMAHA. SRI GOPALAKRISHNASWAMY SAHAYAM**

# PADUR SRI GOPALAKRISHNASWAMY TEMPLE APPEAL FOR RENOVATION AND MAHAKUMBHABHISEKAM

## Padur Sri Gopalakrishnaswamy

Dear Devotee/s,

The temple of Lord Gopalakrishnaswamy at Padur Village, Alathur Taluk, Palakkad District, Kerala is very ancient and very glorious and well managed. The presiding Deity - Sri Gopalakrishnaswamy along with Sow. Rukmani and Sow. Sathyabhama extends His benevolence to his Devotees as the constant protector, Annadhana Prabhu, Santhana Dhana Prabhu, and family deity There are several anecdotes which reveal his great power. He had granted every boon and gratified all desires and relieved many from their pains and sufferings.

The Divinity of Deities, tend to decrease a result (1) Varied omissions and commissions in daily rituals and observances and (2) the defects in the "Ashtabandanam" due to aging. The Agama Sastras stipulates that the renovation and Mahakumbhabhishekam must be performed as the remedy to revive and restore the Divinity once in twelve years. The last Kumbhabhishekam in the above temple was performed in January 1980.

Recently a Deva Prasnam by learned Astrologers was conducted at the temple premises to decide about the future course of action to be followed. In accordance with the prasnam we have to conduct Tila Homam, Verpad Homam, and carry out extensive temple repairs, temple car repairs and temple tank repairs. It has been proposed to do the above work and after completion of the above work the Ashtabanda Maha Kumbabhisekam has to be performed on auspicious days sometime in the middle of 1995 and thereafter to conduct the poojas in the traditional Vedic Style.

The expenditure for the purpose is estimated at Rs. 7 lakhs.

To meet this we the committee members earnestly request you to send in your donations by Cheques or Drafts drawn in favour of Sri. P.S. Krishnan, Secretary, Padur Sri Gopalakrishnaswamy Temple Renovation and Mahakumbhabhishekam Committee, Padur Village & P.O. Pin - 678 548.

# ஜெ.ஜெ. தண்ணீர்ப் பந்தல்களின் பணி...?

● சி. இளஞ்செழியன், சா. மங்கலம்.
? பம்பாய் நகருக்குள் நுழைய பர்மிட் முறை அமுல்படுத்த முயற்சி செய்கிறார்களே, இது எதைக் காட்டுகிறது?
! இந்தியாவைச் சி(ல)ல தலைவர்கள் துண்டு துண்டாக உடைக்க நினைப்பதைத்தான்.

● சீதா மகன், மதுரை.
? நடிகர் சரத்குமார் எம்.பி. ஆகப்போகிறாராமே?
! எம்பிப் பார்ப்பவரெல்லாம் எம்.ஜி.ஆர் ஆகிவிடுவதில்லை!

● என். மாலதி சுகுமாரன், நாகப்பட்டினம்.
? பதவிக்காலம் முடியும் முன்னர் நரசிம்மராவ் சிரிப்பாரா?
! எங்கே, சுற்றி இருக்கிறவங்க அவரைச் சிரிக்க விட்டால்தானே! ஆளுக்கொரு பக்கமா இழுத்துக்கிட்டு அவஸ்தைப்படுத்தறாங்களே!

● சகா. நாகராஜ், பொள்ளாச்சி.
? கவனித்ததுண்டா? குஷ்பு ப்ரியன், ரஜினி ப்ரியன், ரேவதி ப்ரியன், என்றெல்லாம் உள்ளனரே தவிர, காந்தி ப்ரியன், இந்திய ப்ரியன் என்று ஒருவரும் இல்லையே?
! அதானே... இன்னும் கேட்டா தராசு ப்ரியன்னு கூட ஒருவர் இருக்கிறாரு! ஹி.... ஹி....

● பா. ராமலெட்சுமி, சென்னை - 101.
? அரசியலில் மிகவும் உயர்ந்த பதவி எது?
! வோட்டுப் போடுவது.

● தி.மா. தமிழழகன், திருச்சி.
? "கன்னிமேரி சுவரொட்டி பிரச்னையில் ஜெயலலிதா மன்னிப்புக் கேட்கத் தேவையில்லை" என்று ராமகோபாலன் கூறியுள்ளது எந்த விதத்தில் நியாயம்?
! அவர் கன்னிமேரி சுவரொட்டியிலும் கன்னிகா பரமேசுவரி யையே காண்கிறாரோ என்னமோ? பிறகென்ன, சரணாகதி தத்துவத்தைக் கடைப்பிடிக்க வேண்டியதுதான்!

● மேலை பழ. நாகப்பன், சென்னை - 41.
? ஜெ.ஜெ. தண்ணீர்ப் பந்தல்களின் பணி(!) குறித்து....?
! தலைவர்களுக்கு காண்டிராக்ட் வசூல், வேலை வாய்ப்பு ஊழல், தொழில் தொடங்க லஞ்சம் என்று பல மார்க்கங்கள் உள்ளன. தொண்டர்களுக்கு தண்ணீர்ப் பந்தலாவது வசூலுக்கு உதவட்டுமே என்றுதான் பெரிய மனது பண்ணி... அத்துடன் பழைய எம்.ஜி.ஆர். - ஜெ சினிமா பாடல்களை அலற விட மற்றொரு வாய்ப்பு! நடைபாதை ஆக்கிரமிப்பு, பாதசாரி களுக்கு இடையூறு.

● எல். கோபாலகிருஷ்ணன், அரக்கோணம்.
? கருப்பு, கறுப்பு - எது சரி?
! 'கருப்பு' என்றால் 'பஞ்சம்' என்று அகராதி அர்த்தம் சொல் கிறது. கருமை சரி. கரிய நிறத்தைக் குறிக்கும்.

● என். சண்முகம், திருவண்ணாமலை.
? இசை அமைப்பாளர் ரகுமான் இல்லம் சென்று முதல்வர் வாழ்த்து தெரிவித்தது பற்றி....?
! ஜெ.ஜெ ராகம் கண்டு பிடிப்பதாக குன்னக்குடி முந்திக் கொண்டு விட்டார் என்பதால், இவர் ஒரு சசிகலா ராகம் கண்டுபிடிக்க முன்வராமலிருந்தால் சரி!

● ஆர். ராஜதுரை, சீர்காழி. ☐
? முஸ்லீம் நகரப் பெயர்களை மாற்ற எண்ணும் மகா ராஷ்டிர சிவசேனை அரசின் செயல் நல்லதா?
! 'நாங்கள் மத உணர்வு காரணமாகச் செயல்படவில்லை;


• எம்.பி. ஆவார்?


• சிரிப்பாரா?


• சரணாகதி தத்துவம்!



அடக்கமாக அழகாக ஒரு ஃபிளாட் வேணுமே!



சொந்த வீடு வேணும்னு ஆசைதான். ஆனால், மொத்த பணமும் கொடுக்க முடியாதே...



எங்க குடும்பம் பெரிசு... கொஞ்சம் பெரிய ஃபிளாட்டா வேணுமே...?



ஃபிளாட்தான் என்றாலும் அழகாக இருக்க வேண்டாமா?



நேரத்தோட எந்த பில்டர்ஸ் முடித்துத் தராங்க.....?



தரமான கட்டமைப்புன்னு நம்பி வாங்க முடியுமா?

உங்கள் அனைத்து கேள்விகளுக்கும் ஒரே விடை : அசோசியேட்டட் பில்டர்ஸ். சென்னை நகரில் டீலக்ஸ் ஃப்ளாட்டுகள் மற்றும் தனி வீடுகள் வாங்க, முன்னணி நிறுவனங்கள் மூலம் கடன் வசதி பெற, சுலபத் தவணைகளில் வீடு வாங்குக, மேலும் விவரங்கள் அறிய தொடர்பு கொள்ளுங்கள்.




**ASSOCIATED BUILDERS**

2nd Floor, 26,
Ranganathan St.,
T.Nagar,
Madras - 600 017.
INDIA
Ph: Off: 4340224/
4340210.
Res.: 2345244
Fax: (044) 2344333

சரித்திர ரீதியான தவறுகளைத் திருத்துகிறோம்' என்று சமாதானம் வேறு சொல்கிறார்கள். சரித்திரத்திலிருந்து பாடம் கற்கலாமேயொழிய அதைத் திருத்த முடியாது. சரித்திரச் சின்னங்களையும் சரித்திரத்தை உள்ளடக்கிய பெயர்களையும் பாதுகாக்க வேண்டுமே தவிர, சிதைக்கக் கூடாது. சரித்திரத்தை சரித்திரமாகவே பார்ப்பதுதான் சரி. சரித்திரம் படைக்கும் ஆற்றலில்லாதவர்கள்தான் இம்மாதிரி குறுக்கு வழிகளில் மக்கள் கவனத்தைக் கவர்ந்து பிரபலமடைய வேண்டியிருக்கிறது.



• சசிகலா ராகம்...?



• கற்பனைத் திறன்!



• சரியும் தப்பும்!

● **மு. கருணாநிதி, தேவராயநேரி.**

*? உங்களுக்கு முதல்வர் ஆகும் தகுதி இருக்கிறதா?*

! உங்க பெற்றோர்கள் உங்களுக்கு மு.க. பேரையே வைச்சுட்டதாலே உங்களுக்கு மட்டும்தான் அந்தத் தகுதி இருக்கிறதா நினைக்காதீங்க!

● **எம். இராஜேந்திரன், லால்குடி.**

*? ரேஷன் அரிசி விலையை ஒரு ரூபாய் குறைத்துள்ளார்களே?*

! என்.டி. ஆருக்கும் தெருமுனையில் வந்து கொண்டிருக்கும் தேர்தலுக்கும் நன்றி.

● **எம். ரேவதி, மன்னார்குடி.**

*? மதுரை சிறைச் சம்பவம் பற்றி உங்கள் கருத்து?*

! ஆங்கிலேயர் ஆட்சியில் சிறை என்பது அடக்குமுறையின் ஓர் அடையாளம். அந்த நிலை இன்னும் நீடிப்பது வருந்தத்தக்கது. ஜனநாயகத்தில் சிறை என்பது அன்பும் கண்டிப்பும் கலந்த ஒரு சீர்திருத்த முகாமாகத் திகழ வேண்டும். சிறைச்சாலை சீர்திருத்தம் பற்றிப் பல அறிஞர்கள் (கமிஷன்) அறிக்கை தயாரித்துத் தந்துள்ளனர். அதையெல்லாம் படித்துப் பார்க்க ஆட்சி பீடத்தில் அமர்ந்திருப்போருக்கு ஏது அவகாசம்? அச்சுப்பிச்சு அரசியலுக்குத்தான் நேரம் சரியாயிருக்கிறது!

● **டி.என். பாலகிருஷ்ணன், சென்னை - 101.**

*? ஏழ்மையா? ஏழைமையா? ஏழைமை என்ற வார்த்தையை முதன் முதலில் இந்த வாரத் தலையங்கத்தில்தான் பார்த்தேன்! (26.3.95)*

! ஏழ்மை என்பது ஏழு என்ற எண்ணினைக் குறிக்கும். 'ஏழைமை' என்பதே சரி.

● **ம. மாரிமுத்து, மதுரை - 3.**

*? "காட்டில் உள்ள யானைகள் கஞ்சாச் செடிகளைத் தின்று போதை மயக்கத்தில் மரங்களை அழித்து வருகின்றன" என்று சட்டசபையில் தாமரைக்கனி பேசியது பற்றி...?*

! காட்டிலே திருட்டுத்தனமாகக் கஞ்சாச் செடிகள் பயிரிடப்படுவதும், அதை அதிகாரிகள் கண்டும் காணாமல் இருப்பதும், ஆதாயம் அடைவதும் உண்மைதான். அப்புறம் யானைகள், அவற்றின் போதை மயக்கம் எல்லாம் தா.க.வின் கைச்சரக்கு. கற்பனைத் திறனைப் பாராட்டலாம்.

● **க. கோபி, ஆவடி.**

*? வன்முறை நிறைந்த பம்பாய் படத்தை ஒரேயடியாகப் புகழ்ந்து தள்ளிவிட்டீரே?*

! காந்தி படத்தில் கூடத்தான் வன்முறை தூக்கிவாரிப் போட, கண்ணை இறுக்கி மூடிக் கொள்ளும் அளவுக்கு இருக்கிறது! அது, என்ன மாதிரி உணர்வுகளை நம் உள்ளத்தில் தோற்றுவிக்கிறது என்பதுதான் முக்கியம். அப்படிப் பார்க்கும்போது காந்தி போல, பம்பாய் திரைப்படமும் ஆரோக்கியமானதே.

● **எல். மீனாட்சி சுந்தரம், மதுரை.**

*? "ஜெயில் கைதிகளுக்கு போதை வஸ்து, பணம் எல்லாம் தாராளமாய் அடிக்கடி கிடைக்கிறது" என சட்டசபையில் சட்ட அமைச்சர் கே.ஏ.கே. பேசியது சரியா?*

! 'புலிகள் தப்பியதற்கு என்னைக் குறை கூறுங்கள்; முதல்வரை ஏன் இழுக்கிறீர்கள்?' என்று கேட்டவர்தானே! சட்டசபையில் இப்போது பேசியது சரி; பதவியில் நீடிப்பதுதான் தப்பு!

❑ ரூ. 25 பரிசு பெறுபவர் :
ஆர். ராஜதுரை,
97, பிடாரி வடக்கு வீதி,
சீர்காழி - 609 110.



# பெஸ்ட் ஆஃப் லக் ஆனந்த்!




• ஆப்டெக் போஸ்டர்



**வி**ஸ்வநாதன் ஆனந்த்!

படத்தைப் பார்த்தால் கிராண்ட் மாஸ்டர் 'காஸ்பரோவை எப்படி சமாளிக்கிறது...?' என்று கவலையில் மூழ்கின மாதிரி இல்லை...?

உண்மையில் அப்படியெல்லாம் டென்ஷனாகாத உற்சாகமான இளைஞர். ஒரு மாட்சின் போது, ஆனந்தின் எதிராளி சிகரெட் புகையை வேண்டுமென்றே இவர் முகத்தை நோக்கி ஊதியிருக்கிறார். புகைபிடிக்கும் பழக்கம் இல்லாத ஆனந்துக்கு அது 'அலர்ஜி' என்று தெரிந்து வேண்டுமென்றே இறைடித்திருக்கிறார்! இருந்தும் ஆனந்த் 'மூட் அவுட்' ஆகவில்லை; முகத்தையே மறைக்கும்படி ஒரு பெரிய தொப்பி அணிந்து, நிதானமாய் ஆடி ஜெயித்திருக்கிறார்!

**ல**யோலா கல்லூரி பி.காம்., பட்டதாரி ஆனந்த். இவர் காம்ஸ்கியை ஜெயித்ததும், பிரத்யேகமான வாழ்த்துப் போஸ்டர்கள் அடையாறு பகுதியில் முளைத்தன. அரசியல் ஸ்டைல் போஸ்டர்கள் இல்லை - ஆப்டெக் கம்ப்யூட்டர்ஸின் அடையாறு கிளை அச்சடித்து ஒட்டியவை! (இளம் சாதனையாளர்களை ஊக்குவிக்க நாங்கள் இந்தப் பழக்கத்தைக் கடைப்பிடிக்கிறோம் என்கிறார் ஆப்டெக் பார்த்தசாரதி.)

ஆனந்த் வசிப்பது அடையாறு அருகே பெசன்ட் நகரில். தமது அறையில் செஸ் ஆடும் கம்ப்யூட்டர் வைத்திருக்கிறார். ஏராளமான புத்தகங்கள்; பத்திரிகைகள் - எல்லாமே சதுரங்க ஸ்பெஷல்!

"அவன் சாப்பிடும்போது போஸ்ட்மேன் வரக் கூடாதே என்று வேண்டிக் கொள்வேன்" என்கிறார் ஆனந்தின் அப்பா விஸ்வநாதன். "ஏதாவது செஸ் பத்திரிகை வந்தால் உடனே அதில் மூழ்கிடுவான்; அப்புறம் சாப்பாடு மறந்து போகும்...."

**ஆ**னந்துக்கு செஸ் தவிர வேறு ஈடுபாடே கிடையாதா?

உண்டு! பாப் மியூசிக் பிடிக்கும் - என்பதுகளில் வெளியான இசை மட்டும். அதுவும் அடுத்தவருக்குத் தொந்தரவு கொடுக்காமல் தம் காதுகளில் மட்டும் விழும்படிதான் ஒலிக்க வேண்டும்.

இத்தாலிய, சைனீஸ், மெக்ஸிகன் உணவு வகைகள் பிடிக்கும். ஆனால் முதல் சாய்ஸ் தென்னிந்திய உணவுதான். சுத்த சைவம்.

சமீபத்திய டீ.வி. பேட்டியில் கல்யாணத்தைப் பற்றிய கேள்வி கேட்ட போது, "அப்பா அம்மாவிடம்தான் இது பற்றிப் பேச வேண்டும்" என்று முகம் சிவக்கச் சொல்லி விட்டார்.

பேசினோம் : "அல்ட்ரா மாடர்னாக இல்லாத, குடும்பப்பாங்கான, புத்திசாலிப் பெண் கிடைத்தால் நாங்கள் ரெடி!" என்கிறார் அம்மா சுசிலா.

— எஸ். சந்திரமௌலி

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் : வி. முரளி, பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : சீதா ரவி. நிர்வாக ஆசிரியர் : கி. ராஜேந்திரன்.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி - ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு : கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் : ரூ. 525/-.

